

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது-ஐப்பசி
2023 - நவம்பர்

இணைய வழி
மலர்-1 - இதழ்-3

## அருள்மிகு முக்குறுணி விநாயகர்

தென்சபாநாயகர் கோயில், கோவிலூர்

**திருநெல்லை**

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது – ஐப்பசி

2023–நவம்பர்

இணையவழி மலர் 1 – இதழ் 3

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்

# பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

# அறம் செய்ய விரும்பு

அறம் செய்வது குறித்த இரண்டு நிகழ்வுகளை இந்த இதழில் நினைவு கூற விழைகின்றோம்.

**முதல் நிகழ்வு:**

நம் கோவிலூர் ஆண்டவர் சரித்திரம் படிக்கும் எல்லோருக்கும் கோவிலூரில் சிதிலமான நிலையில் இருந்த அருள்மிகு திருநெல்லை அம்மை உடனுறை கொற்றவாளீசுவரர் திருக்கோவிலை 214 ஆண்டுகளுக்கு முன் அவர்கள் புதிதாகக் கட்டியது தெரிந்ததே. அப்போது அவர்களிடம் கோவில் கட்டுமளவுக்கு பொருள் வசதி இல்லை. ஆனாலும் அவர்கள் வைராக்கியத்தினாலும், இறையருளாலும் கோவில் கட்டத் தேவையான அளவு பொருள், நகரத்தார் கொடையாக வந்தது.

அவர்கள் காலத்தில் துவங்கிய பணி மென்மேலும் விரிந்து, பல மண்டபங்களும், ஊருணியும் அதில் உள்ள நீராழி மண்டபமும் மூன்றாம் பட்டம் சீர் வளர் சீர் சிதம்பர சுவாமிகள் காலம் வரை நடை பெற்றது. அதன் பின் ஒரு சிறிய தொய்வு.

பட்டத்துக்கு வர தயங்கிய ஐந்தாம் பட்டம் சீர் வளர் சீர் வீர சேகர சுவாமிகள் கனவில் கொற்றவாளீஸ்வரர் தோன்றி, "கோவில் வேலையை இப்போது துவங்கு. எந்தத் தடையும் வராது", என்று அருளியதாக வரலாறு. அதன் பின் கோவில் இப்போது உள்ள அளவில் நிறைவு பெற்றதும், அதற்கு அப்போதைய சிருங்கேரி மகா சுவாமிகள்

வந்து கும்பாபிஷேகம் செய்ததும் நகரத்தார் தருமத்தின் பொற்காலம்.

ஐந்தாம் பட்டம் சுவாமிகள் அத்தோடு நிற்கவில்லை. சிருங்கேரி சாரதாம்பாள் கோவிலையும் நமது பாணியிலேயே கட்டிக்கொடுத்தார்கள். அதன் தொடர்பாக அப்போதிலிருந்து இன்றளவும் நம் திருமடத்திற்கு சிருங்கேரி மடத்தில் நவராத்திரி உற்சவத்தில் நடைபெறும் தர்பார் வழிபாட்டில் முன்னிருக்க அழைக்கப் படுகிறோம்.

ஆண்டவர் காலத்திலும், அவர்கள் வழித்தோன்றல்களான ஐந்தாம் பட்டம் வரை நகரத்தார்களை கோவில் திருப்பணி செய்ய தூண்டியதால் சுமார் 120 பாடல் பெற்ற தலங்களில் நகரத்தார் திருப்பணி நடைபெற்றது.

**இரண்டாவது நிகழ்வு:**

அண்மையில், 2002ஆம் ஆண்டு நம் 12ம் பட்டம் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற 96 ஊர் நகரத்தார் மாநாட்டு ஒளிப்பதிவு கிடைத்தது.

அதில் நாச்சியப்ப சுவாமிகள் "அறம் செய்ய விரும்பு", எனும் ஔவையார் மொழிக்கு எடுத்துக்காட்டாகத் தான் உழைத்து ஈட்டிய செல்வத்தில் கணிசமான அளவு, கல்விக்கும், நலிந்தோர் திருமணங்களுக்கும், முதியோர் உதவிக்கும் கொடையாக அளித்தார்.

அப்போது, அவர்கள் கல்விக்காக அளிப்பதாக வாக்களித்தது ஒரு கோடி ருபாய் மட்டுமே. இந்த அறத்திற்கு, மேலதிகமாகத் தேவையான அளவு பொருளை நகரத்தார் அளிப்பார்கள் என்று அந்த மாநாட்டில் நம்பிக்கை தெரி



வித்தார்கள். ஆனால் அந்த நம்பிக்கை ஈடேறவில்லை. அதனால் சுவாமிகள் தன் செல்வத்திலிருந்து, எப்போதும் நடைபெறுமாறு ஏற்பாடு செய்ய என்னைப் பணித்தார்கள். அதன்படி அவர்களின் பங்களிப்பினால் மட்டுமே இன்றளவும் சிறப்பாக நடை பெற்று வருகிறது

ஆண்டவர் அருளால், அவர்கள் எண்ணப்படி அந்த தருமம் இன்றளவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது

இந்த இரண்டு நிகழ்வுகளும் சுமார் 100 ஆண்டு இடை வெளியில் நடை பெற்றவை. இது, காலத்தின் மாற்றத்தையும், நம் மனப்பான்மை, அறச்சிந்தனை போன்றவற்றில் ஏற்பட்ட மாற்றத்தையும் பிரதிபலிக்கின்றன.

வள்ளுவப் பெருந்தகை அறம் குறித்து மூன்று அதிகாரங்களை வைத்துள்ளார். அவையாவன, அறன் வலியுறுத்தல், ஒப்புரவு அறிதல், ஈகை. ஒப்புரவு அறிதல் சமுதாய முன்னேற்றத்திற்குச் செய்யும் அறமும், ஈகை என்பது வறியோருக்குச் செய்யும் அறமும் ஆகும்.



*“தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு.”*

என்ற குறள், நாம் ஈட்டும் பொருளெல்லாம் தக்கவர்க்கு உதவி செய்வதற்கே என்பதை தெளிவாகச் சொல்லுகிறது.

பசி பொறுக்கும் தவ சீலரின் பெருமையை விட பெருமையானது பிறர் பசி தீர்ப்பது என்று

*ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்.*

என்ற குறள் மூலம் அன்னதானத்தின் சிறப்பைச் சொல்லும் வள்ளுவர், இன்னும் ஒருபடி மேல் சென்று பசியைத் தீர்ப்பதே மறுமைக்கு நாம் ஏற்படுத்தும் சேமிப்பு என்று

*அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள்வைப் புழி.*

என்றும் வலியுறுத்துகிறார்.

நாம் மிகுதியான அறமனத்தோடு இருந்த காலத்தை விட இப்போது நம் சமுதாயம் வளர்ச்சி குன்றியுள்ளது.

நாம் மீண்டும் முந்தய புகழுடனும் மகிழ்வுடனும் வாழ

- நம் அறச்சிந்தனை குழந்தைகள் மனதில் விதைக்கப்பட வேண்டும்.
- நம் முந்தய திருப்பணிகள், இளைய சமுதாயத்திற்கும் குழந்தைகளுக்கும் பயிற்றுவிக்கப்பட வேண்டும்.
- அதற்கு எல்லா முக்கிய நிகழ்வுகளுக்கும் நம் சொந்த ஊருக்கு அவர்கள் வர ஊக்குவிக்கப்பட வேண்டும்.
- குலதெய்வ வழிபாட்டில் இளைய தலைமுறை ஈடுபட வேண்டும்.
- இன்றய தலைமுறை அறம் செய்ய விரும்ப வேண்டும்.

அனைவரும் நல்ல முறையில், மகிழ்ச்சியாக தீபாவளி திருநாளைக் கொண்டாடி இருப்பீர்கள்.

இது வரை அறம் செய்தவர்கள் அதை இன்னும் அதிகமாகச் செய்யுங்கள். இந்த தீபாவளி முதல், அனைவரும் நல்லறங்களைச் செய்து நல்வாழ்வு வாழ நம் ஆசிகள்.

**அடுத்த இதழிலில் இருந்து திருச்சிராப்பள்ளி, டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய இயக்குநர், மரு.இரா.கலைக்கோவன் அவர்கள் எழுதும் “பத்திமைக் கால ஆடற்கலை” என்னும் தொடர் இடம் பெறும்.**

## கோவிலூரின் கதை

# கோவிலூர் ஆண்டவர் திவ்ய வரலாறு

பகுதி-3

## திருக்கோவிலும் மடாலயமும் – எழுப்பிய திருவுள்ளம்

- **கனகு**
காரைக்குடி



சீர் வளர் சீர் முத்தி ராமலிங்க ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் ஆண்டவர் முத்துராமலிங்கர் வாழ்வில் பல்வேறு அற்புதங்களும், திருவிளையாடல்களும், அருள்மாட்சிகளும் நடைபெற்று வந்தன. ஆண்டவர் தன் குருவான ஸ்ரீ உகந்தலிங்கருக்கும் அவரின் குடும்பத்தாருக்கும் வேண்டுவன அளித்து வந்தார். குருவிற்கு காணிக்கையாக நெல் மூட்டைகளையும் வழங்கி அவர் அருள் பெற்றார். ஆண்டவரை நண்பர்களும், பக்தர்களும், சீடர்களும், பணிந்துப் போற்றி மகிழ்ந்து அவர் புகழ் பரவினர்.

### கருட தரிசனம்

நல்லான் செட்டியார் ஒரு முறை கருடனைப் பார்த்த பின்பே உணவருந்த வேண்டும் என்று எண்ணியிருந்தார். அவரிடத்தில் "யாமே கருடன்! என்னைக் கண்டு கொண்டாய். இனி உண்ணலாம்" என்று ஆண்டவர் கூற அதனையும் தாண்டி நல்லான் செட்டியார் கருடனைத் தேடித் தேடி அலைந்தார். கருடனைக் காணமுடியாமல், ஆண்டவரைத் தரிசித்து அவர் சொற்கள்படியே அவரே

கருடனாகி நிற்க இவர் தன் விரதத்தை முடித்துக்கொண்டார்.

## குரு பரிபூரணம்

இவ்வாறு இருக்கும் காலத்தில் ஆண்டவரின் குருவான ஸ்ரீ உகந்த லிங்கர் 1870 ஆம் ஆண்டு, அதாவது வெகுதான்ய வருடம் பங்குனி மாதம் 26 ஆம் நாள் பரிபூரணம் அடைந்தார். தம் குருவின் பரிபூரண நிகழ்வை பல அடியாா் பெருமக்கள், ஆன்மீகப் பெருமக்கள் புடைசூழ நடத்தினார். இதன்பின் சிதம்பரம் கேணி மடத்தில் இருந்த வீரபத்ரசாமியை பொருள்வைத்த சேரியில் இருக்க வைத்துத் தான் காரைக்குடிக்கு வந்து சேர்ந்தார்.

## கன்னிகை சொன்ன அறிவுரையும் கோயில் பணி தொடக்கமும்

காரைக்குடியில் அடியார்களை அனுதினமும் சந்தித்து அவர்களுக்கு ஞான வழி காட்டிவந்தார். ஆண்டவருக்கு அப்போது இருபத்தோரு வயது நடைபெற்றது. கோவிலூர் கொற்றவாளீசர் திருக்கோயில் மேம்பாட்டுப் பணி தொடங்குவதில் சிறு காலதாமதம் ஏற்பட்டது. இந்நேரத்தில் ஆண்டவர் சுவாமிகள் வீட்டிற்கு அவர் இல்லாத நேரத்தில் ஒரு கன்னிப் பெண் வருகை தந்து அவரின் தாயாரிடம் ‘‘ எனக்கு வீடு கட்டித் தருகிறேன் என்று உங்கள் மகன் சொன்னார். அதனை நினைவு படுத்துங்கள் ” என்று கூறினார்.

ஆண்டவர் சுவாமிகள் வீடு வந்து சேர்ந்தபோது இச்செய்தியை அவரின் தாயார் சொல்ல உடன் கோயில் பணிகளைத் தொடங்கினார். பல நகரத்தார் பெருமக்களின் பொருளுதவியால் கோயில் திருப்பணி தொடங்கப்பெற்றது. கொற்றவாளீசர் சன்னதி, அம்மன் சன்னதி, அநேக மண்டபம், இராச கோபுரம், விமானங்கள், வாவி, தடாகம், இராச வீதி போன்றனவற்றை ஆண்டவர் சுவாமிகள் திட்டமிட்டுக் கட்டினார்.

## ஆண்டவரின் வேண்டுகோள் கடிதத்திற்கு இரங்கிய இலுப்பை முனி

கோயிலுக்கு உரிய கொடிமரம் தேவைப்பட்டது. பல மரங்கள் பார்த்தும் எம்மரமும் சரிவர அமையவில்லை. திருக்கோஷ்டியூருக்கு அருகில் உள்ள ஏரியில் ஒரு பெரிய இலுப்பை மரம் இருப்பதாகக் கேள்விப்பட்டு அதனைக் கொண்டு கொடிமரம் செய்ய முடிவானது. ஆனால் அந்த இலுப்பை மரத்தில் முனி ஒன்று குடியிருப்பதால் அதனை வெட்ட வேண்டாம் என்று அவ்வூரார் தடுத்தனர்.

இதனை அறிந்த ஆண்டவர் சுவாமிகள் அந்த மரத்தில் ஒரு வேண்டுகோள் திருமுகம் (கடிதம்) எழுதி வைத்தார். ‘இலுப்பை மர முனியய்யா! கொற்றவாளீசர் கொடிமரத்திற்கு இம்மரம் தேவை என்பதால் வேறு மரம் பார்த்துக் கொள்ளவும்” என்றெழுதி அம்மரத்தில் எழுதி வைத்தார். ஆண்டவர் சொல்லுக்கே வலிமை அதிகம் என்றால் எழுத்திற்கும் இன்னும் வலிமை அதிகம் அல்லவா. இலுப்பை முனி அகன்றது. கொற்றவாளீசர் கோயிலுக்குக் கொடிமரம் வந்தது.

இவ்வாறு பல நிகழ்ச்சிகள் நடைபெற்று வர கோயில் திருப்பணிகளும் சிறப்புடன் நிறைவேறி வந்தன.

## மக்களுக்கு அறிவுரை

நாளும் கோயில் பணிகளைப் பார்ப்பது, அனைத்து வேளைகளிலும் அம்மன், சுவாமி அபிடேகம் தீபம் பார்ப்பது,

கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு நல்லன சொல்வது என்று பணிகளைப் பட்டியலிட்டுக் கோயிலூர் ஆண்டவர் செய்துவந்தார். குறிப்பாக மக்களிடத்தில் பக்தி பெருக வேண்டும். செப, தபம் செய்ய வேண்டும். நால்வர் பாடல்கள் இசைக்கவேண்டும். நந்தவனம் அமைக்க வேண்டும். இவை செய்ய ஊருக்கு ஊர் மடாலயங்கள் அமைய வேண்டும் என்று நன்மொழிகளை நாளும் சொல்லி வந்தார்.

ஆண்டவர் முத்துராமலிங்கர் வந்த பின்பே, நகரத்தார் ஊர்களில் மடம் உண்டானது. சிவாலங்கள் மிகுதியும் உண்டானது. வாசிட்டம் படிக்கப்பட்டது. நால்வர் தமிழ் படிக்கப்பட்டது. இதுவெல்லாம் கோவிலூர் ஆண்டவரின் சிறப்புகளாக அமைந்தன. இவை கோவிலூர் மடாலயத்தின் சிறப்புக்களாக இன்றும் அமைந்துள்ளன. என்றும் அமையும். ஆண்டவர் வழி சிறக்கும்.

கோயில் பணிகள் பல சன்னதிகளை உள்ளடக்கி வளர்ந்தது. அதளக் கண்மாயில் வணங்க வருவார்க்கு ஏங்கி நின்ற அகத்தீஸ்வரர் கொற்றவாளீசர் கோயிலுக்கு வந்து நாளும் பூசை பெற்றார். மறவன் கோட்டை கைலாச நாதர், நித்யகல்யாணி அம்மையும் கொற்றவளீசர் கோயிலுக்குள் வந்து அருள் புரிந்தனர்.

கோவிலூர் அம்மன் சன்னதிக்கும், கொற்றவாளீசர் சன்னதிக்கும் இடையில் சிறு தெய்வப் பீடம் ஒன்று இருந்தது. அதற்கு எருமையைப் பலி கொடுக்கும் வழக்கம் இருந்தது. இடையில் ஏற்பட்ட இந்த பீடத்தை நகர்த்திட ஆண்டவர் எண்ணினார். பணியாளர்களை ஏவி அப்பீடத்தை நகரத்த முயற்சி மேற்கொள்ளப் பட்டது. பணியாளர்கள் பீடத்தை நகரத்த அஞ்சினர். கோவிலூர் ஆண்டவர் உயிர்ப்பலி கொள்ளும் இப்பீடத்தை இங்கு இருந்து நகர்த்த வேண்டும் என்ற எண்ணத்தில் தானே முதன் முதலாக பீடத்தை நகரத்தும் பணிக்கான முதலடியை எடுத்து வைத்தார். அதன் பின் பணியாளர்கள் பயமின்றிப் பீடத்தை நகர்த்தினர்.

அப்பீடத்தின் உயிர் கொள்ளும் சக்தியை அமைதியாக்க அப்பீடம் குளத்துள் இடப் பெற்றது. இருப்பினும் குளத்தில் மூழ்கிய இளம் பெண்களை அப்பீட தேவதை ஆட்கொண்டு அவர்களை ஆட வைத்தாள். கோவிலூர் ஆண்டவர் தெருவழியே நடக்கும்போது இப்பெண்களின் அவல நிலையைக் கண்டார். பின் மற்றொரு பீடத்தை கோயிலுக்குச் சற்றுத் தொலைவில் அமைத்து அங்கு அத் தெய்வத்திற்கு இருப்பிடம் தரப்பெற்றது. ஊர் அமைதியானது. கோயிலும் உயிர்ப்பலி கொள்ளாத இடமானது.

## அஞ்சாத பெருமாளும் அவரின் புற்றும்

ஆண்டவர் ஒரு நாள் தூங்கும் பொழுதில் கனவில் சாளி என்ற ஊரில் உள்ள அஞ்சாத பெருமாள் தோன்றி தன் முதுகில் புற்று உள்ளது. அதனைத் தாங்கள் மட்டுமே நீக்க இயலும் என்று கோரிக்கை வைக்கிறார். அடுத்த நாள் காலையில் நல்லான் செட்டியாரை அழைத்து அவர் தொடர்புடை சாளி திருக்கோயிலைக் காண ஆண்டவர் புறப்பட்டார்.

நல்லான் செட்டியாரை அழைத்து அக்கோயிலின் அய்யானருக்குப் பின் யாது உள்ளது எனக் கண்டுவரச் சொன்னார். நல்லான் குளிக்காமல் வந்துவிட்டேன் என்னால் இயலாது என்றார். உடன் ஆண்டவர் தானே தன் காலால் ஒரு உதை உதைத்துச் சுற்றுச்சுவரைத் தள்ளிவிட்டார். அங்கே அய்யனாருக்குப் பின்பு பெரிய புற்று வளர்ந்திருந்தது. இது குறித்து

நல்லான் செட்டியாரிடம் கேட்டபோது, கல் தச்சன் ஒருவனுக்கு இக்கோயிலைப் புதுப்பிக்க பணம் தந்ததையும் அவன் காலம் தாழ்த்துவதையும் சொன்னார்.

உடன் அந்தக் கல் தச்சனை வரவழைத்து அவனிடத்தில் கனவில் கண்ட காட்சியை ஆண்டவர் உரைத்தார். இருப்பினும் அவன் இன்னும் காலம் தாழ்த்தினான். அப்போது அவன் மனைவி கர்ப்பமாக இருந்தாள். காலம் தாழ்த்திய நிலையில் அவனின் மனைவிக்கு கர்பத்தில் இருந்து செந்நீர் ஒழுகியது. பயந்துபோன கல் தச்சன் ஆண்டவரிடம் வந்து நடந்ததைச் சொல்லி, அழுதான். ஆண்டவர் அருள் பார்வையால் மனைவி நலம் பெற்றாள். கோயில் பணி நடைபெற்று முடிந்துக் குடமுழுக்கு ஆனது.

**மடம் கட்டத் தொடங்குதலும் திருநெல்லை அம்மன் பூசைப் பொருள்களைத் தருதலும்**

கோயில் பணி விரைவாக நடந்து வந்தது. அதே நேரத்தில் மடத்தின் பணியையும் தொடங்க எண்ணம் கொண்டார் ஆண்டவர். தன் இருபத்தோராம் வயது முதல் முப்பத்து நான்காம் வயது வரை கொட்டகைகளிலும் ஒட்டுத் திண்ணைகளிலும் சத்திரங்களிலும் தங்கி வந்த ஆண்டவருக்கு நிலையான இடம் வேண்டும் என்ற எண்ணத்தின் விளைச்சலே கோவிலூர் மடாலயம் கட்டுவதற்கான நோக்கமாக அமைந்தது.

அதற்காக நல்ல நாள் குறித்து கோவிலூர் திருமடத்தின் அடிக்கல் நாட்டும் பணியை அவர் செய்தார். அதற்காக உரிய பூசை பொருட்கள் வாங்க இரு குழுக்கள் திருப்பத்தூர் நோக்கியும், காரைக்குடி நோக்கியும் செல்ல இரு குழுக்களும் வரத் தாமதமாகின. அந்நேரத்தில் கோயிலுக்குள் இருந்து, ஒரு பெண் தன் கரங்களில் பெரிய தாமரைப் பூவை ஏந்தி அதில் தேங்காய், மற்றும் பூசைப்பொருள்களைக் கொண்டுவர அவற்றை வைத்து அன்றைக்கு மடத்திற்கான பூசை நடைபெற்றது. இதன்பின் அந்தப் பெண்ணைத் தேடினால் கிடைக்காத தூரத்திற்கு அவள் சென்றுவிட்டாள். வந்தவள் திருநெல்லை அம்மனே என்று எண்ணி மகிழ்ந்தனர்.

**நல்லானுக்கு பாடம் சொல்லலும், தானே மெய்ப்பொருளாக நிற்றலும்**

நல்லான் செட்டியார் அவ்வப்போது ஆண்டவரிடம் பாடம் கேட்டு வந்தார். வேதாந்த சூடாமணியைக் கேட்க வெள்ளத்திலும் அவர் நீந்தி வந்தார். அவ்வாறு வந்தவரை பாடம் கேட்டது போதும் ஆண்டவரே மெய்ப்பொருளாகக் கொள்ளுவீர் என்று ஞானவழி காட்டினார் ஆண்டவர்.

சில நேரங்களில் நல்ல சொல், நிமித்தம் கேட்க, காண நல்லான் கொற்றவாளீசர் கோயிலுக்கு வருவதுண்டு. அவ்வாறு ஒரு நாள் வரும்பொழுது ‘ இனி இதுபோல நிமித்தம் கேட்க வேண்டாம். நாமே உமக்கு அனைத்தும் சொல்வோம்” என்றார் ஆண்டவர். நல்லான் எப்போதும் போல ஆண்டவரை மீறிக் கோயிலுக்குச் சென்று, பல நேரம் காத்திருந்து கௌலி கேட்டு வந்தார். ஆண்டவரிடம் வந்து இனி இதுபோல் நடக்கமாட்டேன். தங்கள் சொல்லே எல்லாம் எனப் பணிந்தார்.

இவ்வாறு ஞான வழியும், திருக்கோயில் வழியும், மடாலய வழியும் கோவிலூர் ஆண்டவரால் உருவாக்கம் பெற்றன.

*(வளரும்)*

# வைராக்கிய சதக தொடர் – 3





தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

## தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள்

வைரம் அல்லது வயிரம் என்ற சொல், பொருள் நுட்பமுடைய செஞ்சொல்லாகும், ஒன்பது (நவ) மணிகளுள் ஒன்றான வைரம் – ஒளி, உறுதி, கூர்மை மற்றும் விலை மதிப்பில்லாதது என்ற கருத்துக்கெல்லாம் பொருள் பொருத்தமாகவே வைராக்கிய சதகத்துள் அறிவுக்கும் மனத்திற்குமான உரையாடல்களைத் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் வினாவிடை விசாரணையாக நூலை அமைத்துள்ளார்கள்.

உடற்கூற்றின் அடிப்படையில் மனமும் அறிவும் இன்றியமையாதனவாகும், அறிவின் அடையாளமே மூளை (BRAIN) தான். அது அறிவியல் ஆய்வின்படித் தலையின் முன், பின் இடமாக நாளமில்லா சுரப்பியாய் முன் மூளை என்றும் பின்மூளை என்றும் பெயர் பெறும்.

மெய், வாய் கண், மூக்கு, செவி என்னும் ஐம்புல உணர்வுகள் முதலில் மூளையில் பதிவாகும். பின்னர் அப்பதிவு அப்படியே பின்மூளையின் கருத்தாய்வுக்கு அனுப்பப்படும். அதன் விளைவை மனம் தொழிற்படத் தொடங்கும். இச்செயல்பாடு களெல்லாம் மின்னல் வேகத்தில் நடைபெறும்.

மனம் என்பது குருதி ஓட்டத்தின் மையமாம் இருதயம் எனப்பட்டாலும் அக்குருதி ஓட்டத்தின் அந்தரங்கப் பேச்சாக ஐம்புலச் செயல்பாட்டைத் தூண்டும் கருவியாய்க் கருதப்படுவதால் தான் மனம் உடையவன் மனிதன் எனப்பட்டான்.

நேற்று பிறந்த காதினும் இன்று பிறக்கும் கொம்பே மாட்டுக்கு வலிமை உடையதுபோல உடலின் அகவுறுப்பான அறிவு, குழந்தை பிறக்கும் போதே இருந்தாலும் அதன்

முதிர்ச்சி வளர வளர மனத்தொடு தொடர்புடைய நிலையில் அறிவும் மனமும் விசாரணைக்குரியதாகின்றன என்பதால் தவத்திரு சாந்தலிங்கர். அதனை வெளிப்படுத்தும் விதமாக வைராக்கிய சதகத்தைப் படைத்தளித் தார்கள். இதைத்தான் திருவள்ளுவர், மனத்தொடு பொருந்தியதைக் கற்றுக்கொண்டால் தவம் தானம் ஒருங்கே கிட்டும் என்கிறார். தவம் என்பது ஆன்மாவுக்கான நிலை, தானம் என்பது பிறருக்கு அறிவுறுத்தும் கொடைத்தன்மை. இவற்றின் வெளிப்பாடே மனம் சித்தம் அங்காரம் என்ற அந்தக் காரணச் செயல்பாடாம்.

*மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு*

*தானம்செய் வாரின் தலை. (295)*

*என்பது வள்ளுவர் வாக்கு*

*இனி அவ் அறிவும் மனமும் உரையாடுவதை நோக்குவோமாக!*

எதையும் அறிய முனையும் அறிவுக்கு அஞ்ஞானமே பலவீனமாகும். அதனை வாட்டி வதைத்து விட்டால் மனம் தூய்மை அடைந்து விடும். அதற்காகப் பாடப்பட்டவைகளே அஞ்ஞான வதைப் பரணி, பாசவதைப் பரணி நூல்களாகும். தத்துவராய சுவாமிகள் பாடிய இவ்விரண்டும் கோவிலூர் மடத்தின் வேதாந்த நூல்களாகும், இவற்றின் சாயலை உடையதே வைராக்கிய சதகம்.

நெஞ்சைப் பார்த்து அறிவு வினாவுவதாகவும் அதற்கு மனம் விடைபகர்வது போன்ற கற்பனை உரையாடல்களாகவே வைராக்கிய சதகத்தின் முதல் ஐம்பது பாடல்கள் கதாப்பத்திர உருவக நிலையில் (Allegory) பாடப்பட்டு உள்ளன.

*வாழி நெஞ்சமே ! சென்றிடேல் !*

*நின்று இதோர் வார்த்தை எற்கு உரை செய்வாய்!*

*கீழ் யாம்இயற்று உயர்தவத்து*

*இவ்வுடல் கிடைத்தது அன்றோ ! மற்று ஈது*

*ஊழி காலம் இங்கு இருக்குமோ?*

*நீயும் ஓர்ந்துளை, எனின் உளபோழ்தே*

*சூழும் ஏழ்பவம் துடைத்தல் செய்யாய் !*

*இதுஎன் தொழுது அரன் துணைத்தாளே !*

இதுதான் வைராக்கிய சதக முதற்பாடல். இதில் அறிவுதான் முதலில் மனத்திடம் வினாவைத் தொடங்கும் போது நெஞ் சமே எனக்கூறி, எனக்குப் பதில் கூறிச் செல்வாயாக என்கிறது.

உரைநடை இலக்கியப் போக்கில் கேள்வி பதில் என்பதாகக் கூறுவது போல் பழங்காலத்தில் வினா உத்தரம் என்பதாகவும் வினா விடைப் பதிகம் என்பதாகவும் மாடல்கள் பாடப்பட்டுள்ளன. அந்த வரிசையில் இவ்வைராக்கிய சதகப் பாடல் அமைகிறது.

இப்பாடலின் மையக் கருத்து நிலையாமை (Instability) என்பதாகும். நிலை யாமை எனும் சுழற்சிக்கு உட்பட்டதே இவ்வுலகம். இந்நிலையாமையை அழிக்க முடியாது. ஆனால் எதிர்கொண்டு சில மாற்றங்களை உருவாக்கிக் கொள்ளமுடியும் என்பதே அதன் முடிவான தத்துவமாகும்.

நிலையாமையே நிலைபெற்று என்றாலும் அந்நிலையாமைக்குரிய உடல், பொருள் ஆவிகளைக் கொண்டு ஓரளவு கானல் நீரல்லாத நிஜங்களை உருவாக்கிக் கொள்ள முடியும் என்ற தமிழிலக்கண இலக்கியக் கொள்கையின் தத்துவ விசாரணையாகவே உண்மைகளை உணர

வைக்கிறார் சாந்தலிங்கர்.

இதற்குச் சான்றாகவே அய்யன் திருவள்ளுவர் அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால், அற்குப ஆங்கே செயல் – (222) என்றபடி நிலையாமையைக் கொண்டே நிலைத்ததைச் செய்து கொள்ளச் சொன்னவாறு சாந்தலிங்க சுவாமிகள் நிகழ்த்தும் உரையடல்கள் கண்ணுக்குத் தெரியும் நிலையில்லா உடலும் கண்ணுக்குத் தெரியா உடலுள் உலவும் உயிரும் அறிவால் மனத்தால் தொழிப்பட்டாலும் சேதனப்படும் என்பதே உண்மையாதலால் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள் என்றபடி ஆன்மா ஆண்டவனின் ஐக்கியத்தை அத்வைதமாக ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வோர் கருத்தைக் கூறுவதாகவே சதகத்தை நிறைவு செய்கிறார் சுவாமிகள்.

அத்துவைத குறிப்பில் ஆன்மாவும் ஆண்டவனும் ஒன்றேயாயினும் ஆன்மா வுக்குள்ள கசடு நீங்கா நிலையில் ஒன்றாக முடியாதென்பதால் துணியை அழுக்குப் போகத் துவைத்தல் போல வினாக்ளுக்கு மேல் வினாவாகக் கேள்வி கேட்டுக்கேட்டு விடைபெறும் தெளிவில் பாடல்கள் அமைந்துள்ளன.

மனித உடல் கிடைத்தற்கரியது. ஏனைய உயிர்கள் உடலால் உய்தியடைய முடியாது. மனம் என்ற ஒன்றும் அவைகட்கு இல்லை. ஆதலால் அவற்றைப் பெற்ற மனிதன் நேற்று இன்று நாளை எனும் உணர்வால் பற்றுக பற்றற்றான் பற்றினை எனச் சுவாமிகள் உறுதிப்படுத்தும் போது சவலை நெஞ்சமே சிவன் அலாது மனித உயிர்க்கு உயிர்தானும் ஓர் துணை இலையாம் என ஒரு பாடலில் கூறுகிறார்.

இதனையே “நேரிலா அரன் கழல் அலால் மிகு சுகம் பிறிதிலை யன்றே !” என்றும் மற்றோர் பாடலில் குறிக்கின்றார். எனினும் ஆன்மா, சார்ந்ததன் வண்ணம் சென்றிடும் என்பதால் மனம் ஒன்றிடப் பூசையைச் செய்யவும் புண்ணியரோடு உறவு கொள்ளவும் அறிவு, மனத்திற்கு ஆணையிடுவதாக 12ஆம் பாடல் வற்புறுத்துகிறது.

மேலும் வாய் விட்டுப் பற்பல நூல் படித்து உணரவும் படித்ததைப் பிறக்குரைத்தும் வாழ்வதால் கடைத்தேற்றம் கிட்டுவதுடன் பூத உடல் நீங்கிப் புனிதமான மரணமிலாப் புகழ் கிட்டும் போது கானல் நீரான வாழ்வு கழிய, பண்டை மேவிய பயமெலாம் அறும், இறை பதத்தில் புகலாம் என 24ஆம் பாடலில் கூறுகிறார்.

இந்த வகையில் சில அடிப்படையான உணண்மைகளைக் கோடிட்டுக் காட்டிய சுவாமிகள் இனி பாவனை வகையில் தடுமாறும் மனத்திற்கு அறிவுரை கூறித் தெளிவு படுத்துவதைக் காண்போமாக !

*(தொடரும்)*

---

**இந்த இதழ் முழுமையாக மின்னனு இதழாக இருக்கும்.இந்த இதழ் வேண்டுபவர்கள் 9443337011 என்ற தொலைபேசி எண்ணிற்கு புலனத் தொடர்பினைச் (WhatsApp) செய்தால் அவர்கள் இந்த குழுவில் இணைக்கப்படுவார்கள்.**

---

# மாணிக்கவாசகரும் திருவாசகமும்






**இராமநாதன் பழனியப்பன்,**
**சென்னை**

*தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி அல்லல் அறுத்துத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை மருவா நெறியளிக்கும் வாதவூர் எம் கோன் திருவாசகம் என்னும் தேன்*

அருள் மணிவாசகரின் திருவரலாறு நாம் எல்லோரும் நன்கு அறிந்ததே! ஆனால் ஒரு விரைவுப் பின் புலப் பார்வை flash back! ஈரெட்டு ஆண்டு எல்லையில் எக்கலையும் கற்றுணர்ந்த திருவாதவூரரான அவர் அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராகி தென்னவன் பிரம்மராயன் என்ற பட்டமும் பெற்றார். இரு மனம் கொண்ட அவரது ஒரு மனம் தம் அமைச்சர் பணியினைச் செவ்வனே செய்ய வைத்தது, மறுமனம் கள்ளக் காதலனிடத்து அன்பு வைத்து ஒழுகும் ஒரு காரிகை போல, மெய்ம்மையாம் பொருளினை அறிய குரு ஒருவரின் திரு அருளைத் தேடிக் கொண்டிருந்தது!

இந்நிலையில், திருவாதவூரர் பெரும் பொருள் கொண்டு பாண்டியனின் குதிரைப் படையை மாற்ற அரேபியக் குதிரைகள் வாங்கக் கிழக்குக் கடற்கரை வந்தார். அங்கே ஒரு குருந்த மரத்தடியில் தொண்டர்தம் குழாத்து மத்தியில் ஆலமர் செல்வன் போன்ற குருவினைக் கண்டார். அங்கே ஓதப் பெரும் ஆகம, வேத, உபநிடத, நாற்பாதப் பொருளெலாம் கேட்டதும் தாம் இதுவரை தேடிக் கொண்டிருந்த குரு இவர் தான் என உணர்ந்தார். ஓடி அவர் திருவடியில் வீழ்ந்தார். வீழந்த அவரைக் குரு பார்த்தார். திருக்கண் நோக்கம் என்ற நயன தீட்சை! மும்மலங்களும் கழிந்தன. அவர் தலையில் தம் பத கமலம் வைத்தார்,

திருவடி தீட்சை! சென்னியில் தம் செங்கை வைத்தார், ஸ்பரிச தீட்சை! உள்ளத்தால் உன்னினார், மானச தீட்சை! தீட்சைகள் நான்கும் நடந்தன. இப்படி ஞானம் பெற்ற திருவாதவூரரிடம் பெரு மாற்றம் நிகழ்ந்தது. தொழுதார், அழுதார், துதித்தார், உலகப் பிடிப்பிலிருந்து கழன்றார்!

*அன்றே எந்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்*

*குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ*

*இன்றோர் இடையூறு எனக்கு உண்டோ எண்தோள் முக்கண் அம்மானே*

*நன்றே செய்வாய்! பிழைசெய்வாய்! நானோ இதற்கு நாயகமே?*

*கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்*
*நலம் தான் இல்லாத சிறியேற்கு நல்கி*
*நிலம் தன் மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி*
*நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு*
*தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!*

*என்னையும் ஒருவனாக்கி இருங்கழல்*
*சென்னியில் வைத்த சேவக போற்றி!*

*புவனியில் சேவடி தீண்டினன் காண்க!*
*சிவன் என யானும் தேறினன் காண்க!*
*அவன் என்னை ஆட்கொண்டு*
*அருளினன் காண்க!*

அடுத்து நிகழ்ந்தது, பஞ்சாக்கர உபதேசம்! இது ஜபத்திற்கான தூலமாக அதாவது நமசிவாய என்றும், ஒளியாக நினைந்து ஓதுவதற்கான சூக்குமமாக, சிவாயநம என்றும், அதி சூக்குமமாக, சிவாய, சிவ, சிவ என்றும் மூன்று நிலைகள் உண்டு. வாதவூரருக்கு சூக்குமமாகிய சிவாயநம என்ற மந்திர தீட்சை நடந்ததாக அவரே பாடியிருக்கிறார்

*நானேயோ தவம் செய்தேன்*

*சிவாய நம எனப் பெற்றேன்*

சரி, வாதவூரரின் நிலை? இதோ, திருவிளையாடல் புராணம் பாடுகிறது!

*தொழுத கையினர், துளங்கிய முடியினர், துளும்ப*

*அழுத கண்ணினர்,பொடிப்புறும் யாக்கையர், நாக்குத்*

*தழுதழுத்து அன்பு உரையினர் தமை இழந்து அழல்வாய்*

*இழுதை அன்ன மெய்யினர் பணிந்து ஏத்துவார் ஆனார்*

[இழுதை அன்ன மெய் – நெருப்பிலிட்ட நெய் போன்ற மெய்யுடையவர்]

வாதவூரர் பாடியதைக் கேட்ட குருவான பெருமான்

*அழுது சாத்து மெய் அன்பருக்கு அகமகிழ்ந்து ஐயர்*

*வழுவிலாத பேர் மாணிக்க வாசகன் என்றார்*

இத்தனை நடந்த பின்பு, பெருமானான குரு அவருக்கு வீடு பேறே கொடுத்திருக்கலாமே? நியாயமான கேள்வி! ஆனால் குருவோ, மணிவாசகருக்கு இப்பூவுலகத்தில் நிறையப் பணி வைத்திருக்கிறார். அதற்காகத்தானே அவர் அவதாரமே செய்யப் பெற்றிருக்கிறார்!

“அப்பணிகள் யாவை?” என்று கேட்கிறீர்களா? இதோ அந்தப் பட்டியலைப் பரஞ்சோதியார் தம் திருவிளையாடல் புராணத்தில் பாடி இருக்கிறார்

1. மணி வார்த்தைகளை இன்னும் சின்னாள் பெருமான் தம் திருச்செவியில் அருந்த வேண்டும்

2. பக்தி எனும் அன்பினைக் கொடுத்து, அவர் கொண்டு வந்த பொருள் அனைத்தையும் தாம் விரும்பும் பணியில் செலவிட வேண்டும்

3. இவரது பண்பினைப் பாண்டியனை உணர வைத்து, அவனுக்கு முக்தி கொடுத்திட வேண்டும்

4. புத்த மதத்தினரை வாதில் வென்றிட வேண்டும்

பரஞ்சோதியார் விடுத்த பிட்டு வாணிச்சி வந்தி அம்மைக்கும் முக்தி அளித்திட வேண்டும் என்பதை நாம் சேர்த்துக் கொள்ளலாம்!

இவ்வாறு, குரு ஏனைய அடியார்களை அனுப்பிவிட்டு மணிவாசகரை மட்டும் இருக்கச் செய்தார்!

*வண்ணந்தான் காட்டி வடிவு காட்டி*

*மலர்க்கழல் அவை காட்டி வழி அற்றேனைத்*

*திண்ணம்தான் பிறவாமல் காத்து ஆட் கொண்டாய்*

குருவின் ஆணைப்படி குருந்த மரத்தடிக்கு அருகிலேயே குதிரை வாங்கக் கொண்டு வந்த பொருளால் ஆத்ம நாத சுவாமி திருக்கோயிலை உருவாக்கியதையும், மன்னனின் கோபத்தையும், பெருமான் நரிகளைப் பரியாக்கி மதுரையில் மன்னனிடம் கயிறு மாறிக் கொடுத்ததையும்,

பரிகள் மீண்டும் நரிகளாகி ஓடிப் போனதையும், இதற்கிடையில், வாதவூரரை மன்னன் பல முறை தண்டனைக்கு உள்ளாக்கியதையும், அவரைக் காக்க வைகையில் வெள்ளம் வரச் செய்ததையும்,பெருமான் கூலி ஆளாய் வந்து வந்தியிடம் பிட்டு வாங்கி உண்டு அவள் பங்குக் கரையினை அடைக்காது ஆட்டம் போட்டு உறங்கியதையும், மன்னன் அவரை பிரம்பால் அடித்ததையும், வாதவூரரின் மெய்யன்பினை மன்னனுக்கு உணர்த்தி அவனுக்கு வீடுபேறு கொடுத்ததையும், வாதவூரர் மீண்டும் திருப்பெருந்துறை வந்து குருவைக் காணாது அரற்றியதையும், நாம் அறிவோம்!

சிவபுராணம் தொடங்கிப் 20 பதிகங்களை அங்கே பாடினார். அசரீரியாய் உத்தரவுகள் வரிசையாய் வர அங்கிருந்து தம் திருத்தல யாத்திரையைத் தொடங்கினார். உத்தரகோச மங்கை சென்றார். பெருமானின் திருத்தரிசனமும் கண்டார். நீத்தல் விண்ணப்பம் பாடினார். அதிலிருந்து ஒரு அழகிய திருப்பாடல்

*இருந்து என்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை என்னின் அல்லால்*

*விருந்தினனை விடுதி கண்டாய்! மிக்க நஞ்சு அமுதாய்*

*அருந்தினனே மின்னும் உத்தர கோச மங்கைக்கு அரசே!*

*மருந்தினனே பிறவிப் பிணிப்பட்டு மடங்கினர்க்கே*

அதுகேட்டு இரங்கிய பெருமான் உத்தரகோசமங்கையில் மீண்டும் குரு உருவாகித் தரிசனம் காட்டி அடுத்து அவருக்கான பணிகளைப் பட்டியல் இட்டார்!

*(...அடுத்த இதழில் )*

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

என்றுவரை செங்கதிரில் ஒளி இருக்கும்
என்றுவரை வெண்மதியில் குளிர்ச்சி இருக்கும்
என்றுவரை கங்கையிலே நீர் இருக்கும்
என்றுவரை இமயம் நிமிர்ந்து நிற்கும்
அன்றுவரை இராமாயணத்தின் புகழும் நிற்கும்.



**முனைவர் சரசுவதி இராமநாதன்,**
**பள்ளத்தூர்**

## நமது பாரதத்தில்:

எந்தமொழியைப்பார்த்தாலும், அதில் மிகச்சிறந்த கவிஞர் இராமகதையை எழுதியிருப்பது தெரிகிறது. அல்லது இராமாயணத்தை யாத்தவரே மிகச்சிறந்த கவிவாணராகத் திகழ்கிறார் எனலாம்.

| | | |
|---|---|---|
| வடமொழியில் | – | வால்மீகிமுனிவர் |
| தமிழில் | – | கவிச்சக்கரவர்த்தி கம்பர் |
| ஹிந்தியில் | – | கோஸ்வாமி துளசிதாசர் |
| மலையாளத்தில் | – | எழுத்தச்சன் |
| குஜராத்தியில் | – | பிரேமானந்தசுவாமி |
| மராட்டியில் | – | ஏகநாதர் |
| அசாமில் | – | மாதவகந்தலி |
| ஒதிசியில் | – | பரலாம்தாஸ் |
| தெலுங்கில் | – | புத்தாளட்டியும்மொல்லம்மாவும் |
| கன்னடம் | – | நாகசந்திராவும்முத்தண்ணாவும் |
| உருதுவில் | – | போத்தி |

பல நாடுகளிலும் இராமாயணக் கதை பரவலாக வழங்கி வருவது கண்கூடு. இராமனை இருகை வேழம் என்றார் கம்பர். வேழம் என்பது யானை. யானை தன் காலைப் பிடித்துக் கொண்டவரைத் தலைமேல் ஏற்றி வைக்கும். அதுபோல் இராமனின் பாதம் பற்றியவரை அவன் வாழ்வில் உயர்த்துவான் என்பது கருத்து.

## இராமநாமம்

நமசிவாயமந்திரத்தில் ‘ம’ என்ற எழுத்தும், நாராயண மந்திரத்தில் ‘நா’ என்ற எழுத்தும் சேர்ந்து ‘நாம’ ஆனது என்பார் சத்குரு தியாகராசர். (எவானிஎன்றபாடலில்)

*“நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே*
*தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே*
*ஜன்மமும் மரணமும் இன்றித் தீருமே*
*இம்மையே ‘நாம’ என்றிரண் டெழுத்தினால்”*

அந்த நாமத்தைச் சொல்லியே உயர்ந்தவன் அனுமன். அந்த அனுமனின் புகழ் பாடும் காண்டமே சுந்தரகாண்டம். மற்றக் காண்டங் களின் பெயர்களைப் பாருங்கள். இராம இலக்குவர் பாலர்களாக இருந்தது பாலகாண்டம். அயோத்தியில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுவது அயோத்தியா காண்டம். கானகத்து நிகழ்ச்சிகளைக் கூறுவது ஆரண்ய காண்டம். கிட்கிந்தை யில் நடந்தவற்றைக் கூறுவது கிட்கிந்தா காண்டம். போர் நடந்தது யுத்த காண்டம். இதுமட்டும் ஏன் சுந்தரகாண்டம் எனப் பெயர் பெற்றது?

1. இழந்த பொருள் கிடைப்பது சுந்தரம் – என வடமொழி வாசகம் உள்ளது. ‘விநஷ்டவஸ்துலாபாயசுந்தரம்’ காணாமல் போன சீதை கிடைத்தாளே!

2. கடைசிப் படலம் தவிர இராமன் எங்கும் வரவில்லை. ஆனால் ‘அழகன்’ அவன் புகழே நிறைந்தது சுந்தரகாண்டம்.

3. சீதையின் ‘தவஅழகு’ பேசப்படுவதால் சுந்தரகாண்டம்

4. சுந்தரன் என்பது அனுமனின் பெயர். அவன்தான் இக்காண்டத்தின் தலைவன். ஆகவே சுந்தர காண்டம்.

5.கவிதைச் சிறப்பாலும் இது சுந்தரகாண்டமே!

## சுந்தர காண்ட நிகழ்வுகள்

சீதாதேவியைத் தேடித் தென்திசை புறப்பட்ட அனுமன் ‘இராம’ என்று வணங்கிப் பேருரு எடுத்தான். மலைகள், மரங்கள் பின்னிட, முன்னேறி வேகமாகக் கடலைத் தாவினான்.

‘தசமுகனாம் அரக்கனை அமுக்கு வேன்’ எனக் கயிலை மலை பெயர்ந்து செல்வது போலிருந்தது அவனது தோற்றம்.

‘மைந்நாகமலை வானுற உயர்ந்து நின்று’ வழிமறித்தது உன் தந்தை வாயு எனக்குச் செய்த உதவிக்கு, உனக்கு நான் விருந்தளித்து நன்றி காட்டுவேன்’ என்றது.

‘அண்டர்நாயகன் அருட்தூதனாகச் சென்று, மீண்டு வருகையில் விருந்தேற்பேன்’ எனப் பணிவுடன் புறப்பட்டான் அனுமன். ‘அறுகூலச்சத்துரு’ என்று ஒரு வகை யினர் உதவுகிறேன், அன்பு காட்டுகிறேன் என்று செயலைத் தாமதப்படுத்துவர். ‘சுரசை’ எனக்குப் பசி அனுமனே உன்னை உண்பேன்” என வாயைத் திறந்து விழுங்க வந்தாள். அவள் வாயிலே புகுந்து சிறிய வடிவுடன் வெளிவந்தான். சிம்வழிகை என்ற அங்காரதாரை, ஆலகாலம் போல




வந்து, நிழல்பித்து அனுமனைக் கீழே தள்ளினாள். (சாயாக்ராஹி என்பர்). இன்று ரிமோட் இருக்கிறதே. எங்கோ இருப்பதை இங்கிருந்தே இயக்க அது போல. அவள் வயிற்றைக் கிழித்து மாய்த்து வெளிவந்த அனுமன் அஷ்டமாசித்தி பெற்றது "இராம" நாமத்தால் தான். எத்தனை இடர் வந்தாலும் 'இராம' என்றால் எல்லாம் ஓடிவிடும். இது இப்படலத்தின் மையக் கருத்து.

*"ஊறுகடிது ஊறுவன, ஊறுஇல் அறம்உன்னா*
*தேறல்இல் அரக்கர்புரி தீமை அவைதீர*
*ஏறும்வகை எங்குளது? "இராம" என எல்லாம்*
*மாறும் அதில் மாலு பிறிதில என வலித்தான்"*

அரக்கர் புரி தீமைகளிலிருந்து விடுபட என்ன வழி ராமநாமமே !

'இராம' நாமம் சொல்வோம். கவலை, பிணி, இடர்எல்லாவற்றிலிருந்தும் விடுபடுவோம்.

# திருமந்திரம்

## ரசிகமணி டிகேசி விளக்கம்

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதல் பூதமே

குழந்தை மரத்தால் செய்யப்பட்ட யானை பொம்மையைக் கண்டு 'யானை! யானை' என்று அஞ்சித் தாயிடம் தஞ்சம் அடைகிறது. தாயோ இது யானை இல்லை மரம் என்று கூறிக் குழந்தையின் அச்சம் நீக்குகிறாள் என்றால் குழந்தை கண்டது யானையா? மரமா? என்ற ஐயம் எழுகிறது. யானையாகக் கண்ட குழந்தைக்கு மரம் என்பது புலப்படவில்லை; மரம் என்ற தெளிவு பெற்ற தாய்க்கு யானை புலப்படவில்லை. இவற்றைப் போல் உலகத்தையும், உலகப் பொருள்களையும் இறைவனாகவே காண்பார்க்கு அவை புலப்படுவதில்லை. உலகமாகவே காண்பார்க்கு இறைமை புலனாவதில்லை.

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 2

# சீடாசாரம் நூல் அறிமுகம்

## (ஆசானின் கோபத்தை சிவபெருமானால் கூட நிவர்த்தி செய்ய முடியாது)



**- கு. அன்பு மெய்யப்பன்,**
**உதவிப் பேராசிரியர்,**
**இராமசாமி தமிழ்க் கல்லூரி,**
**காரைக்குடி - 3.**

ஒரே குடும்பத்தில் பிறந்த இருவர் ஞானத்தின் மீது நாட்டம் கொண்டு துறவு கொள்வது என்பது உலக வரலாற்றில் அரிதினும் அரிது. அப்படிக் கோவிலூருக்கு ஞானம் பெற வந்து சேர்ந்தவர்கள் இருவர். அவர்கள் நம் போற்றுதலுக்குரிய, இரண்டாம் பட்டமாக அருளாட்சி செய்த துறவாண்டவர் என்றழைக்கப்பட்ட சீர்வளர்சீர் அருணாசல ஞானதேசிகர். அடுத்தவர் மூன்றாம் பட்டமாக ஆட்சி நடத்திய அவரது உடன் பிறந்த தம்பி சிதம்பர சுவாமிகள் என்ற சீர்வளர்சீர் கருணாநிதி ஞானதேசிக சுவாமிகள்.

இருவரும் ஆண்டவரிடத்துச் சீடர்களாக இருந்த காலத்தில், சீர் வளர் சீர் கருணாநிதி சுவாமிகள் கோவிலூரை விட்டு நீங்கி, தன் துறவு வாழ்க்கையை , திருப்பெருந்துறை சென்று மேற்கொண்டு, அங்கு வசித்து வந்துள்ளார். அவரை மீண்டும் கோவிலூருக்கு வரச் செய்வதற்காகவும், ஆண்டவருக்குச் சீடராக இருக்கச் செய்யவும், ''சீடாசாரம்'' என்ற பெயரில் பல சிறந்த தத்துவ ஞானிகள் எழுதிய பாடல்களைத் தொகுத்து இந்நூலை உருவாக்கியுள்ளார். அவ்வாறு தொகுத்த நூலைத் தன் சீடர் ஒருவரை அழைத்து, ''சிதம்பரத்திடம் கொடுத்து வா'' எனக் கூறி அனுப்பினார். தன் அண்ணன் தொகுத்து அனுப்பிய அப்பாடல்களைப் படித்த, கருணாநிதி சுவாமிகள் உடன் கோவிலூருக்கு வந்து சேர்ந்துள்ளார்.

இத்தொகுப்பு நூல் அளவில் சிறிய

நூல். இது நாற்பத்தியிரண்டு பக்கங்களை மட்டுமே கொண்டது. 1929இல் கோவிலூரின் கிளை மடமான திருப்பூவண மடத்தின் பீடாதிபதியாக விளங்கிய காசிகானந்த ஞானாசாரிய சுவாமிகளால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பாடல்கள் தொடங்கும் முன் அதற்கு முன்னுரை போன்று, அருணாசல ஞான தேசிகர், கருணாநிதி சுவாமிகள் பொருட்டு எழுதிய ”சீடாசார வசநம்” என்று ஒரு பகுதி உள்ளது. அதில், ஆசிரியருக்குப் பணிடை செய்வது புண்ணியம் எனக் குறிப்பிடுகிறார். அதற்கு ஒரு சான்றையும் கூறி விளக்குகிறார். ”மனைவி கணவனுக்குப் பணிவிடை செய்யவேண்டும் என்பதைத் துன்பமாகக் கருதி அவனை விட்டுப் பிரிந்தால், இப்பிறப்பில் துன்பத்தையும், மறுபிறப்பில் துன்பத்தையும் அனுபவிப்பாள். அதுபோல, ஞானாசிரியரைத் தேடிக் கண்டுபிடித்து, சரணடைந்து, சில சாத்திரங்களை அறிந்து, பின் இங்கு இருப்பது நமது சரீரத்திற்கு(உடலுக்கு) ஒத்துக்கொள்ளாது என்று நினைத்து அவரை விட்டு நீங்குவது இப்பிறப்பில் துன்பத்தையும், மறு பிறப்பில் நரகத்தையும் கொண்டு சேர்க்கும்” என்று சுட்டிக் காட்டுகிறார்.

மேலும், ஞானாசிரியரை விட்டு நீங்காது, அவர் புறக்கணித்தாலும், வைதாலும் அவர் மீது வெறுப்புக் கொள்ளாது, தேகம் உள்ளவரை அவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும், அதுவே துறவு தர்மம் என்றும் குறிப்பிடுகிறார்.

துறவிகளை முமுட்சுகள் என்று குறிப்பிடுவது அக்கால வழக்கம். அத்துறவிகளைப் பார்த்து, ” தற்போதுள்ள மூமுட்சுகள், தீவிரமான வீடுபேறடையும் விருப்பம் கொண்டவர்கள். தன் ஆசிரியரை பரமசிவமாகப் (சிவனாக) பாவித்து, அவருக்குப் பணிவிடைகள் செய்து, சாத்திரங்களைப் படித்துப் பலன் பெறவேண்டும்” என்று அறிவுரை கூறுகிறார். இந்நூலில் உள்ள பாடல்கள் இளம் துறவிகளுக்கு விளங்குவது கடினம் என்பதால் அதற்கான உரையையும் தான் எழுதியதாக் குறிப்பிடுகிறார் அருணாச்சல சுவாமிகள்.

. இறும்பூதூரில் வாழ்ந்த வேதாந்த குருநாதர் தத்துவராயர் எழுதிய பெருந்திரட்டு, குறுந்திரட்டு என்பனவற்றில் இருந்து பல பாடல்களை எடுத்து இந்நூலில் தொகுத்துள்ளார் அருணாச்சல ஞானதேசிக சுவாமிகள்.

ஆசிரியர் என்ற சொல்லை ஆசு+இரியர் என்று பிரிக்கலாம். ஆசு என்றால் குற்றம் என்பது பொருள். இரியர் என்றால் நீக்குபவர் என்பது பொருள். மொத்தமாக மாணாக்கரின் குற்றங்களை முழுவதுமாக நீக்குபவர் என்பது பொருள். அத்தகைய உயர் குணம் கொண்ட ஆசிரியரிடத்து எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை பல நூல்களில் இருந்து சேகரிக்கப்பட்ட பாடல்கள் நமக்கு விளக்குகின்றன. மொத்தம் 50 பாடல்களைத் தொகுத்துள்ளார் சுவாமிகள். அதற்கான உரையும் மிக எளிமையாக எழுதியுள்ளார்.

மிகச் சுருக்கமானது கடவுள் வாழ்த்துப் பாடல். ஆனால் அதற்குள் பல கடவுள்களை வேண்டுகிறார்.

*“ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொனம்பலவன்*

*ஞானகுரு வாணியையும் நாடு”*

என்பது அப்பாடல், ஆனைமுகனான விநாயகப் பெருமான், ஆறுமுகனான முருகப் பெருமான், அம்பிகையாகிய சிவகாம சௌந்தரி, பொனம்பலவன் என்ற

கனக சபைக் கடவுள், ஞான ஆசிரியர், வாணியாகிய சரசுவதி தேவி ஆகியோரை மனத்தின்கண் நாடு. என்று இளம் துறவிகளுக்குக் கட்டளையிடுவது போல் கடவுள் வாழ்த்துப்பாடலைப் பாடியுள்ளார். அவர் தேர்ந்தெடுத்த முதல் பாடல்,

*"தந்தை தாயும் மெய்த்தகவுடை உறவும்*
*சாலும் கல்வியும் தகுமுயிர்த் துணையும்*
*சிந்தை ஆறும் சீலமும் வலியும் திருவும்*
*இன்பமும் சிதைவிலா அறிவு*
*முந்தைஆம் உளத்து உவகையும் உயிரும்*
*முத்தியும் மொழிவரும் சமைவும்*
*மெந்தையாகி வந்து ஏழையேனையும்*
*ஆள் இறைவனார் கழலாகும் என்றனக்கே"*

ஆசிரியனானவர்,

1.தந்தை போன்றவர்
2.தாய் போன்றவர்
3.தகுதியுடைய சுற்றத்தார்கள் போன்றவர்
4.உயர்ந்த கல்வியைத் தருபவர்
5.வித்தைகளைக் கற்றுக்கொடுப்பவர்
6.தகுதியான துணையாக இருப்பவர்
7.மனஒழுக்கத்தைக் கற்பிப்பவர்
8.அறிவுக்கூர்மை பெறச் செய்பவர்
9.செல்வம் எது என உணரவைப்பவர்
10.இன்பம் எது என உணரவைப்பவர்
11.குறைவில்லா அறிவைத் தருபவர்
12.மனத்தின்கண் மகிழ்ச்சியை நிலைபெறச் செய்பவர்
13.மோட்சம் பெறுவதற்கான வழிகளைக் கூறும் பொறுமையும் கற்றுத் தருபவர் என்று ஆசிரியரின் பணிகளைச் சுட்டுகிறார். இவற்றை எல்லாம் கற்றுக் கொடுக்குமாறு ஆசானின் திருவடிகளை வணங்குவதாகப் பாடல் முடிகிறது.

பிரம்ம கீதை என்ற மற்றொரு நூலில் உள்ள ஒரு சிறந்த பாடலை எடுத்துத் இந்நூலில் அவர் தந்துள்ளார். அப்பாடல் இறைவனை விட மேலானவர் ஆசிரியர் என்ற கருத்துப்பட எழுதப்பட்டுள்ளது. அப்பாடல்,

*"சத்குரு பரசிவன் ஆயினும் வாசி சாற்றில்*
*சற்குரு சிவன் கோபித்தால் சமிப்பிக்கும் சிவனாலென்று*
*சற்குரு கோபம் தன்னை சமிப்பிக்க ஒண்ணாது அத்தான்*
*சற்குரு நாதன் பாதம் தப்பிடாம் முத்தன் அன்றே"*

என்பதாகும்.

முக்கண்ணனான சிவனுக்கும் நல்ல ஆசிரியனுக்கும் உள்ள வேறுபாடு என்ன தெரியுமா? சிவன் நம் மீது கோபம் கொண்டால், அதனை நல்லாசிரியர் நிவர்த்தி செய்துவிடுவார். ஆனால் ஆசிரியர் நம் மீது கோபம் கொண்டால் சிவனால் கூட நிவர்த்தி செய்ய முடியாது. ஆகவே, அக்காரணத்தினால் நல்லாசிரியரது திருவடியினின்றும் நீங்காது இருப்பவர் மோட்சத்தைப் பெறுவார். என்று இறைவனுக்கும் ஆசிரியனுக்குமான வேறுபாட்டைக் கூறும் சிறந்த பாடல் இது.

இது போல் ஆசிரியரது சிறப்பையும் ஆசிரியரின் இன்றியமையாமையையும் புலப்படுத்தும் ஒப்பற்ற ஐம்பது பாடல்களைக் கொண்டுத் தொகுக்கப் பெற்றது இந்நூல். ஆசிரியரது கட்டுப்பாட்டில், ஒழுக்கத்தோடு வளர்க்கப்பட்ட பிள்ளைகள் நற்கதி அடைவார்கள். நாமும் நம் ஆசிரியர்களைப் போற்றுவோம். ஞானாசிரியர்களைப் பெற்று அவர்கள் வழி நின்று நற்பேறு அடைவோம். நம் பிள்ளைகளுக்கும் ஆசிரியர்களை மதிக்கக் கற்றுக்கொடுப்போம்.

# கண்டுகொண்டோம் காரைக்கால் அம்மையாரை

## உயிர்களைத் தோற்றுவிப்பனும், காப்பவனும், தன்னுள் ஏற்பவனும் இறைவனே



**- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்**

உலகத்தில் ஒரு வேடிக்கை நடக்கிறது. சுழல் சக்கரம், சுழன்று கொண்டே இருப்பது போல, உயிர்க் கூட்டங்கள் இங்கே வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கின்றன. ஆண்டுகள் ஆக ஆக, உலகத்தின் ஜனத்தொகை, பெருகிக் கொண்டே வருகிறது. இந்தப் புதிய மக்கள் எங்கிருந்து வருகிறார்கள்? இதற்கு முன் எங்கே இருந்தார்கள்? நூறு ஆண்டுக் காலத்தில் ஜனத்தொகை இரட்டித்து விடுகிறது. ஜீவர்களும் எங்கே இருந்தார்கள்.

உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்கள், அளவுக்கு அகப்படாதவை. ஜனத்தொகைக் கணக்கு, மனிதர்களின் கணக்கைத்தான் சொல்லுகிறது. மக்களையல்லாமல் எத்தனையோ கோடி கோடி உயிர்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. கண்ணுக்குத் தெரியாத பூச்சி முதல் மிகப்பெரிய காண்டாமிருகம் வரையில் பலபல பிராணிகள் உலகில் உயிர் வாழ்கின்றன. அந்த உயிர்கள் எப்போதும் அப்படியே இருப்பதில்லை. பிறந்தும் இறந்தும் மீட்டும் பிறந்தும் வருகின்றன. அப்படி வருகின்ற சுழற்சியில் அவை, வெவ்வேறு பிறவிகளை எடுக்கின்றன. புழுவாக இருந்த உயிர், மறுபிறவியில் புழுவாகவே பிறக்கும் என்பது இல்லை. வேறு பிராணியாகவோ மனிதனாகவோ பிறக்கலாம். இப்படி மாறி மாறி வரும் பிறப்பின் மிக உயர்ந்தது மனிதம் பிறவி. இப்போது மனிதர்களின் தொகை மிகுதியாக இருக்கிறது. பல வகையான பிராணிகளின் தொகை குறைந்து விட்டது. அந்தப் பிராணிகளின் கணக்கை எடுப்பவர்கள் யார்? எத்தனையோ வகையான விலங்கினங்கள் முன்பு இருந்தன என்றும் இப்போது இல்லாமல் ஒழிந்தன என்றும் ஆராய்ச்சி வல்லுநர்கள் சொல்கிறார்கள்.

இப்படி உயிர்கள் இறந்து, மீட்டும் வேறு வடிவெடுத்துப் பிறக்கும் செயல், இடைவிடாமல் நடந்து கொண்டே இருக்கிறது. நாடக மேடையில் வேறு வேறு கோலம் புனைந்து நடிகர்கள், வேறு நாடகத்தில், முன் நாடகத்தில் இல்லாத வேறுபட்ட கோலங்களைப் புனைந்து நடிக்கிறார்கள். இவ்வாறு அவர்களை நடிக்கும்படி இயக்கும் இயக்குநர் ஒருவர் இருக்கிறார். அவர், தாமே சில பாத்திரங்களாகச் சில சமயங்களில் வருவார். பல சமயங்களில் அவர், நடிக்காமலே நாடகத்தை நடத்துவதும் உண்டு. இவ்வாறு பிரபஞ்ச நாடகத்தை நடத்துகிற ஒருவன் இருக்கிறான்.

பொம்மலாட்டத்தில் திரைக்குப்பின் இருந்து, பொம்மைகளை ஆட்டுவிப்பது போல ஆட்டுகிற சூத்திரதாரி அவன். மாயை என்னும் திரையை நீக்கி அவனைப் பார்க்க வேண்டும்.

*“குன்றாத மூவுருவாய் அருவாய் ஞானக்*
*கொழுந்தாகி அறுசமயக் கூத்து மாடி*
*நின்றாயே; மாயைஎனும் திரையை நீக்கி,*
*நின்னையார் அறிய வல்லார்?”*

என்கிறார் தாயுமானவர்.

இவ்வாறு உயிர்க்கூட்டங்களுக்கு உடம்பைக் கொடுத்துப் பிறக்கும்படி செய்கிற இறைவனே, அந்த உடம்பி னின்றும் இறக்கச் செய்து, கோலத்தை மாற்றுகின்றான். அவன் எங்கும் இருப்பவன். அதனால் இறைவன் என்ற பெயர் வந்தது. இறைதங்குதல். ‘பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணன்’ அவன். அவன் அவ்வாறு எங்கும் நிறைந்திருப்பதை நாம் காண முடிவதில்லை. ஆனாலும் பிரபஞ்சம் இயங்குவதைப் பார்க்கும் போது, ‘ஜடமாகிய இதை உடனிருந்து இயக்குபவன் ஒருவன் இருக்க வேண்டும்



*“பிறவிப் பெருங்கடல்” என்பது திருக்குறள். “தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து எவ்வத் தடந்திரையால் எற்றுண்டு”*

என்று பாடுபவர் மணிவாசகர்.

இறைவன் இவ்வாறு பொதுவாக, எல்லா உயிர்களையும் சுழற்றி விட்டாலும் சில உயிர்களுக்குச் சிறப்பான நலத்தைச் செய்கிறான். மற்ற உயிர்களைப் போலப் பிறப்பதும் உலகியலில் சிக்கித் தடுமாறுவதும் இறப்பதுமாக இராமல், தமக்கு என்றும் உறவாக உள்ளவன் இறைவன் என்பதை, அந்த உயிர்கள் உணர்கின்றன.

இறைவனுடைய உண்மையை உணர்ந்த மெய்யன்பர்களே அவ்வுயிர்கள். தம் உடம்பை, நம் கண் காணத்தந்த தந்தை, இங்கே இருந்தாலும் உண்மையாகத் தம் பிறப்புக்கு மூல காரணமாக இருப்பவன் இறைவனே என்பதை உணர்ந்தவர்கள் அவர்கள். ஒவ்வொரு பிறவியிலும்

எடுக்கும் உடம்புக்கு ஏற்றபடி ஒவ்வொரு தகப்பன் அமைகிறான். இறைவனே எந்தப் பிறவியிலும் நமக்குத் தந்தையாக இருக்கிறான்.

தந்தை, தன் மகன் அறிவுடையவனாகத் திகழ வேண்டுமென்றும், நன்றாக வாழவேண்டுமென்றும் எண்ணி அவனுக்கு வேண்டியவற்றை யெல்லாம் தருகிறான். மகன், தந்தையின் விருப்பப்படி ஒழுகாவிட்டால் அத்தந்தை அவனே ஒறுத்து நல்ல வழியில் நிற்கச் செய்கிறான். மகனை ஒறுக்கும் தந்தையைப் பார்க்கும் போது, அவன் கொடியவனாகத் தோன்றுகிறான். ஆனால் தந்தையின் நோக்கம், மகனைத் திருத்த வேண்டும் என்பதுதான்.

உயிர்க்கூட்டங்கள் அறியாமை நீங்கி மெய்யறிவு பெற்று உய்ய வேண்டும் என்பதற்காக இறைவனும் எவ்வளவோ நலன்களைச் செய்திருக்கிறான். அறிவுமிக்க மனிதப் பிறவியை அளித்து, இனிப் பிறவாத நிலையை அடைவதற்கு ஏற்ற வழிகளை நல்லோர்களின் வா யிலாகக் காட்டுகிறான். நல் வழியில் நடவாத உயிர்களுக்குத் துன்பம் தந்து ஒறுக்கிறான்.

தந்தை, தான் பெற்ற செல்வத்தைத் தன் மக்களுக்குக் கொடுக்க விரும்புவான். இறைவனும், தன் அருளாகிய செல்வத்தை மக்களுக்கு வாரி வழங்கச் சித்தமாக இருக்கிறான். பொல்லாத குழந்தைகள், தந்தையை விட்டுப் பிரிந்து இன்னல் உறுவதைப் போல அறியாமை உள்ளவர்கள், இறை நெறியினின்றும் விலகி இடர்ப்படுவார்கள்.

இந்த உலகில் துன்பம் உண்டாவது இயற்கை."பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்"என்பது மணிமேகலை. துன்பம் வரும் போது, அதை நீக்கிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உண்டாவதும் இயல்பு. "துன்பம் இன்றி இன்பம் பெற்று வாழவேண்டும் என்றே யாவரும் விரும்புகிறார்கள். விரும்புவது வேறு; அதற்காக முயன்று அதை அடைவது வேறு. எளிதாகப் பணம் சம்பாதிக்கத் தவறான வழிகளில் புகுகிறவர்களுக்கு இறுதியில் தண்டனையே கிடைக்கிறது. அதுபோல உரிய வழியில் போகாமல் பெற்ற உடம்பையும் வாழ்நாளையும் நேரிய முறையில் ஈடுபடுத்தாமல் இன்பத்தை நாடிப்போகிறவர்களுக்கு இறுதியில் துன்பமே கிடைக்கிறது. 'யாரை அடைந்தால் நம் துன்பம் நீங்கும்?' என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மனிதர்கள் யாவரும் குறை உடையவர்களே. அந்தக் குறைகளில் சிறிது, பெரிது என்ற வேறுபாடு இருக்கும். இருந்தாலும் குறை குறைதாஅது போகவேண்டுமானால் குறைவிலா நிறைவாகிய ஆண்டவனை அணுகவேண்டும்.

*"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*

*மனக்கவலை மாற்றல் அரிது".என்று திருவள்ளுவர் சொல்லவில்லயா?*

'நம் குறையை அவன் தீர்ப்பான், இவன் தீர்ப்பான் என்று யார்யாரையோ நம்பும் வழக்கம் நம்மிடம் இருக்கிறது. திரௌபதியைத் துச்சாதனன் மானபங்கம் செய்ய முற்பட்டான். அவளுக்குப் பாதுகாப்பாகக் கணவர் ஐவர் இருந்தனர். அப்போது அவர்களை நம்பிப் பயன் இல்லாமல் போயிற்று. அவையிலிருந்த உறவினர்களை நம்பினாள். அவர்களும் செயலற்றவர்களாக இருந்தார்கள். பெரியவர்கள் இருந்தார்கள். அவர்களை நோக்கி முறையிட்டாள். அவர்களாலும் அவளுக்கு நலம் செய்ய முடியவில்லை. தன் கையே. தனக்கு உதவி என்று இரு கைகளாலும் ஆடையைப் பற்றிக் கொண்டாள். அப்போதும் துச்சாதனனின்

முரட்டுத்தனத்தை மாற்ற முடியவில்லை. கடைசியில், நீதான் சரண் என்று கண்ணனையே புகலாக அடைந்து கை குவித்தாள். அவன் அப்போது அங்கே இல்லை. இல்லையென்றா நினைப்பது? அவன் இல்லாத இடம் ஏது? இவனையன்றி வேறு புகல் இல்லை என்ற உறுதியோடு,'கோவிந்தா' என்று அரற்றியபோது அவளுக்குப் பாதுகாப்புக் கிடைத்தது. ஆடை நீண்டுகொண்டே போயிற்று. துச்சாதனன் கைகள் சலித்தன.

யாரிடம் மனப்பூர்வமாக முறையிடவேண்டும் என்பது தெரிந்தபோது பாஞ்சாலிக்கு உதவி கிடைத்தது. அவன்தான் அப்படி உதவி செய்யமுடியும்.இதை இறைவனுடைய அன்பர்கள் நன்கு அறிவார்கள். குறை இருக்கும் வரையில், மனநிறைவு இராது; துன்பம் நீங்காது; கவலையே இருக்கும். குழந்தையை யாராவது அடித்தால், அம்மா என்றுதான் அழும். அம்மாவே அடித்தாலும், அம்மா!' என்று தான் அழும், அப்படியே பக்தர்களுக்கு உலகிலுள்ளவர்களால் துயரம் வந்தாலும் வேறு வகையாகத் துன்பம் வந்தாலும் இறைவனையே நோக்கி விண்ணப்பிப்பார்கள்; நைந்து புலம்பு வார்கள்; இரங்குவார்கள் எம் தந்தையே! என முறையிடு வார்கள். அந்த முறையீட்டைக் கேட்டு ஆண்டவன், சும்மா இருப்பானா? எவ்வளவு கொடிய துயரமானலும் அதை உடனே மாற்றி விடுவான்.

*"இறைவனே, எந்தாய் என இரங்கும் எங்கள்மேல் வெந்துயரம் வந்தால், அதுமாற்றுவான்."*

இறைவனே நோக்கி, 'எம் தந்தையே, அப்பா, பரம பிதாவே' என்று நைந்து உருகி இரங்குபவர்கள் அன்பர்கள். அவர்கள் தமக்குப் பற்றுக்கோடாக வேறு யாரையும் பற்றுவதில்லை. இறைவன் ஒருவனே புகலிடம் என்று புகுவார்கள். அது அவர்களுக்கு இயல்பு. அன்பின் நிலை அது.

அவர்கள் குரலைக் கேட்டு, யாருக்கு வந்த விருந்தோ இது என்று புறக்கணியாமல் உடனே அவர்களுடைய துயத்தை மாற்றுகிற கருணையாளன் இறைவன். அவன் ஒருவன்தான் அப்படிச் செய்ய முடியும்.

பொதுவாக, உயிர்க்கூட்டங்களின் வினைக்கு ஈடாக அவர்களைத் தோற்றுவித்தும் உடம்பினின்றும் பிரித்தும் செயல் புரியும் இறைவன், சிறப்பாகத் தன்னையன்றி வேறு யாரையும் புகலாக அடையாத அன்பர்களைத் துன்பத்தினின்றும் விடுவித்து, நலம் அருளுவான் என்ற கருத்தை இந்தப் பாட்டில் காரைக்காலம்மையார் வெளியிடுகிறார்.

*"இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான், தோற்றி இறைவனே ஈண்(டு) இறக்கம் செய்வான்–இறைவனே எந்தாய் என இரங்கும் எங்கள்மேல் வெந்துயரம் வந்தால் அதுமாற்று வான்."*

[ஈண்டு – இப்பிரபஞ்சத்தில்; இரங்கும் – வருந்தி நையும்; வெந்துயரம்–பிறரால் நீக்குவதற்கரிய துயரம், பிறப்பு, இறப்பு ஆகியவை; மாற்றுவான்–போக்குவான்]

**பின்குறிப்பு:**

அமுத நிலையம் 1985 ஆம் ஆண்டு வெளியிட்ட காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி என்ற நூலில் இருந்து எடுக்கப்பட்ட கட்டுரை. காரைக்காலம்மையார் திருப்பாடல்களை முற்றோதல் செய்யத் தொடங்கியுள்ளதால் அம்மையாரின் பாடல் சிறப்புகளை அறிய இப்பகுதி இப்போது திருநெல்லையில் இடம் பெறுகிறது.

https://tinyurl.com/5n78d3nt

# அறநெறி தவறியதால் அழிந்த கார்த்தவீர்யார்ஜுனன்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

பத்துத் தலை கொண்ட இராவணனைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆயிரம் கரங்கள் கொண்ட பராக்கிரமசாலியைப் பார்த்திருக்கின்றீர்களா ? அதுவும் பத்துத் தலை கொண்ட அந்த அசுரனைத் தோற்கடித்துக் கைதியாக்கி அடைத்தவன் ஆயிரங் கரங்கள் பெற்ற மனிதன் என்று சொன்னால் ஆச்சர்யமாயிருக்கும். அப்படி ஆயிரம் கரங்கள் பெற்ற கார்த்த வீர்யாஜுனனும் தன் அறநெறி கடந்ததனால் முடிவில் பரசுராமரால் அழிக்கப்பட்டான்.

தன் பொங்கிச் சுழலும் அலைக்கரங்களால் கரையோரப் பூக்களைத் தாலாட்டியபடி தாய்போல் பெருக்கெடுத்து ஒடுகிறது நர்மதை நதி. அதன் மடிமேல் மாட மாளிகையும் கூடகோபுரமுமாகப் பொலிந்து திகழ்கின்றது மகிஷ்மதி நகரம். இதை இந்திரலோகம் போல் சமைத்து அரசாண்டு வந்தான் ஹைஹேய வம்சத்தின் அரசன் கிருதவீரியன்.

அரசன் கிருதவீரியனும் அரசி பத்மினியும் பல்லாண்டுகள் தவம் செய்து தத்தாத்ரேயரின் அருளால் பெற்ற அருமைப் புத்திரன்தான் கார்த்தவீர்யார்ஜுனன். இவனுக்கு விஷ்ணுவைத் தவிர வேறு யாராலும் அழிவு ஏற்படக்கூடாது என்ற வரத்தை இவன் பெற்றோர் தத்தாத்ரேயரிடம் பெற்றனர். கார்த்தவீர்யார்ஜுனனும் தத்தாத்ரேயரிடம் ஆயிரம் ஆண்டுகள் பணிவிடை புரிந்தான். அதனால் மகிழ்ந்த அவர் இவனுக்கு ஆயிரம் கரங்களையும், மிக நீளமான தங்கத் தேர் ஒன்றையும், அனைத்துலகையும் ஆளும் பேறையும், யாராலும் வெல்லமுடியாத வலிமையையும் அளித்தார்.

இப்படி இருக்க ஒருநாள் அவன் தன் மனைவியருடன் நர்மதையில் நீராடிக் கொண்டிருந்தான். சூரியனின் செந்நிறக் கதிர்கள் பொழிய நர்மதை துள்ளி ஓடிக் கொண்டிருந்தது. அந்நேரம் அரசனின் பட்டமகிஷி "அரசரே நீர் பராக்கிரமசாலி என்பதை அறிவோம். ஆனால் உம்மால் துள்ளி ஓடும் இந்த நர்மதையை அடக்க முடியுமா ?".

பட்டமகிஷி இவ்வாறு அவனைச் சீண்டியதும் அவளுக்குத் தன்

புஜபலத்தைக் காட்டும்வண்ணம் தன் ஆயிரம் கரங்களையும் விரித்து நர்மதையைத் தடுத்தான். பீரிட்டும் கசிந்தும் வழிந்த நர்மதை சில கணங்களிலேயே அவன் கரங்களுக்குக் கட்டுப்பட்டு நின்றுவிட்டாள். உடனே பட்டமகிஷி தன் "ஆஹா! நீரையே நிறுத்திவிட்டீரே. நீர்தான் மகா பராக்கிரமசாலி" எனக் கரங்களைக் தட்டி மகிழ்ச்சியால் கூவினாள்.

இச்சமயம் சில காதங்களுக்கு முன்னே இலங்கை அரசன் இராவணன் தன் புஷ்பக விமானத்தில் நர்மதை வழியாகப் பறந்து சென்றவன் அதன் அழகில் மயங்கிக் கரை இறங்கினான். தன் அமைச்சர்களிடம் சிவபூஜைக்கு மலர்கள் கொண்டுவரச் சொல்லிவிட்டு நதியில் நீராடி சிவலிங்கம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்து தன் சிவபூஜையைத் தொடங்கினான். அவன் சிவத் தியானத்தில் ஆழ்ந்ததுதான் தாமதம். அவனைச் சுற்றிலும் நர்மதை பெருகத் தொடங்கினாள். ஒரு கணத்திலேயே அவன் கழுத்துவரை நீர்மட்டம் ஏறியது.

இதைக் கண்டு வியந்து கரை ஏறிய இராவணன் இவ்வாறு நீர் உயரக் காரணம் என்ன என அறிந்துவரும்படித் தன் அமைச்சர்களை அனுப்பினான். அவர்கள் ஆயிரம் கை கொண்டு தடுத்து நின்ற அரசன் கார்த்தவீர்யாஜுனனின் விளையாட்டால் இந்த விபரீதம் ஏற்பட்டது என்பதைக் கண்டு வந்து சொன்னார்கள்.

வந்ததே கோபம் இராவணனுக்கு. தன் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு புஷ்பகவிமானத்தில் ஏறிக் காற்றினும் கடுகிப் பறந்து வந்தான். அங்கே உல்லாசமாய் ஜலக்ரீடை செய்து கொண்டிருந்த கார்த்தவீர்யாஜுனனைப் பார்த்துக் கோபம் கொப்பளிக்க வாதம் புரியத் தொடங்கினான். வாதம் வாக்குவாதமாகி ஒரு கட்டத்தில் இருவரும் தம் கதாயுதத்தால் பேசிக் கொண்டனர். இராவணனும் வலிமையானவன் என்பதால் இந்த யுத்தம் சிலநேரம் நீடித்தது. எதிர்பாராத ஒரு கணத்தில் தன் கதாயுதத்தால் கார்த்தவீர்யார்ஜுனன் ஓங்கி அடிக்க கண்கள் இருளடைய இராவணன் மயங்கி வீழ்ந்தான். அடுத்து அவன் கண் விழித்த இடம் மஹிஷ்மதியின் காராக்ரகம்.

தன் பேரன் இராவணன் மஹிஷ்மதியின் சிறைச்சாலையில் அடைபட்டு இருப்பதை அறிந்த புலஸ்தியர் கார்த்தவீர்யார்ஜுனனைச் சந்தித்து அவனை விடுவித்து விடும்படிக் கேட்டார். மாபெரும் முனிவரே தன்னிடம் கேட்டுக்கொண்டதால் கார்த்தவீர்யார்ஜுனன் மனமிரங்கி இராவணனை விடுவித்தான்.

இவ்வளவு சிறப்புமிக்க கார்த்தவீர்யார்ஜுனனும் கிட்டத்தட்ட 85,000 ஆண்டுகள் மகிஷ்மதியைச் சிறப்பாக ஆண்டுவந்தான். ஒருமுறை வேட்டைக்குச் சென்றவன் தன் படை பட்டாளத்தோடு ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்துக்குச் சென்றான். அத்தனை பட்டாளத்துக்கும் ஜமதக்கினி முனிவர் தன்னிடமிருந்த காமதேனுப் பசுவைக் கொண்டு அறுசுவை உணவைப் படைத்து வழங்கினார்.

முனிவருக்கு ஏன் அத்தகைய பசு, அது தன்னிடம் இருத்தலே சிறப்பு எனக் கருதிய கார்த்தவீர்யார்ஜுனன் முனிவரிடம் அப்பசுவைத் தனக்குத் தந்துவிடும்படிக் கேட்க அவரோ மறுக்கிறார். தான் அறநெறியைக் கடக்கிறோம் என்பது புரியாமல் கோபமடைந்த

கார்த்தவீர்யார்ஜுனன் தன் வீரர்களுடன் முனிவர் மேல் போர் தொடுக்க முனிவரின் ஆணையால் காமதேனுவோ ஆயிரம் ஆயிரம் வீரர்களை உற்பத்தி செய்து அனுப்புகிறது. அவ்வீரர்களோடு போரிட்டு மன்னனின் வீரர்கள் அனைவருமே அழிய அவனோ வெகுண்டு தன் வாளால் ஜமதக்கினி முனிவரைக் கொன்றுவிட்டுச் செல்கிறான்.

ஆசிரமம் திரும்பிய ஜமதக்கினியின் முனிவரின் மகன் பரசுராமன் தன் தந்தைக்கு நேர்ந்த இந்த அகோர முடிவைக் கண்டு கொந்தளித்துப் போகிறார். உடனடியாக மகிஷ்மதி சென்று கார்த்தவீர்யார்ஜுனனுடன் போர் செய்கிறார். இருவரும் சளைக்காமல் பாணங்களை எய்கிறார்கள். நீதி அவர் பக்கம் இருந்ததால் கார்த்தவீர்யாஜுனன் தன் ஆயிரம் கரங்களால் விட்ட எந்த பாணமும் அவரைத் தாக்கவில்லை. ஆனால் அவனது படைகளை பரசுராமரின் பாணங்கள் துவம்சம் செய்து அழித்தன.

மேலும் அவனது ஆயிரம் கரங்களையும் அவர் தன் பாணங்களால் பூக்களைக் கொய்வதுபோல் தாக்கி வீழ்த்தினார். தன் முடிவு நெருங்கிவிட்டது என்பதையும், அவர் விஷ்ணுவின் அம்சம் என்பதையும் புரிந்து கொண்டான் கார்த்தவீர்யார்ஜுனன். அவர் விட்ட கடைசிப் பாணத்தில் அவன் சிரசு அவர் பாதாரவிந்தங்களில் சரணடைந்தது.

பத்துத் தலை இருந்தும் யோசிக்காமல் ஆயிரம் கரம் கொண்ட ஒருவனிடம் மோதியதால் தோற்கடிக்கப்பட்டான் இராவணன். அதேபோல் ஆயிரம் கரங்கள் இருந்தும் அறநெறி கடந்ததால் அழிந்தான் கார்த்தவீர்யார்ஜுனன்.

# திருமந்திரம்

## ரசிகமணி டிகேசி விளக்கம்

“யாரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்அந்த அகலமும் நிகளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமல் விளம்புகின் றேனே”

“ஒளியின் வேகம் வினாடிக்கு லட்சத்து எண்பத்து ஆறாயிரம் மைல் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அப்படியானால் ஓராண்டுக்காலத்தில் அது எத்தனை கோடி மைலைத் தாண்டிச் செல்லும்! கிட்டத்தட்ட ஐந்து லட்சம் கோடி மைலைத் தாண்டிச் சென்று விடும் ஒளி.

“நமக்கும் சூரியனுக்கம் உள்ள தூரம் ஒன்பது கோடி மைல். அதே தூரத்தில்: ஐம்பதாயிரங்கோடி சூரிய மண்டலங்களை வைக்க வேண்டும். ஒளி பல்வ அவ்வளவையும் கடந்தவர 365 நாட்கள்தான் தேவை.”

“நட்சத்திரங்களின் தூரத்தைப்பற்றி யோசிக்கிற பொழுது நமது மனசே செயலற்றுப் போய்விடும்.”

“பூமி பிறந்தது எப்பொழுதென்று நமக்குத் தெரியாது. பலகோடி ஆண்டுகள் இருக்கும். சில நட்சத்திரங்களின் ஒளி இன்னும் பூமியை தேக்கி வந்து கொண்டு தான் இருக்கிறதாம். வந்து சேரவில்லையாம்.”

“ஏத்தனையோ கோடி ஆண்டுகளாகப். பிரயாணம் செய்தும் ஒளியால் எட்டிப் பிடிக்க முடியவில்லை என்றால், அந்த நட்சத்திரங்களின் தூரத்தை எப்படி அளப்பது?”

“ஒரு அண்டத்தில் இப்படிப் பல கோடி. நட்சத்திரங்கள் உள்ளன. ஒரு அகண்ட த்திலோ, அப்படிப் பல கோடி அண்டங்களே இருக்கின்றன.”

“அகண்டங்கள் கோடானகோடி சேர்ந்ததுதான் பிரபஞ்சம் – கடவுள்த் தத்துவம்.”

“கடவுளை நான் தெரிந்துகொண்டேன் என்று சொல்வதில் ஏதேனும் விஷயம் உண்டா?”

“கடவுள்த் தத்துவத்தை நினைத்த மாத்திரத்திலேயே ஒரே அதிசயத்திற்கு ஆளாகி விடுகிறார் திருமூலர்.”

## சிவாலயங்களின் சிறப்புகள் - 1

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.



வே.இராமசாமி, B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

# திருவஞ்சிக்குளம் மகாதேவர் திருக்கோயில்

முதலில் கேரள மாநிலம் திருச்சூரில் இருந்து 32 கிலோமீட்டர் தொலைவில் உள்ள திருவஞ்சிக்குளம் மகாதேவர் கோயிலின் சிறப்புகள்

இந்தியாவின் மிகப் பழமையான திருக்கோயில்களில் ஒன்று திருவஞ்சி குளம் மகாதேவர் கோயில். இந்தத் திருக்கோயில் கொடுங்கல்லூர் நகரின் தெற்கு பகுதியில் அமைந்துள்ளது. மலைநாட்டில் அமைந்துள்ள திருக்கோயில்களில் பாடல் பெற்ற ஒரே திருக்கோயில் என்ற பெருமையை இத்திருத்தலம் பெறுகிறது. சுந்தரர் பாடிய கடைசி திருப்பதிகம் இத்திரு கோயிலை பற்றி என்று தல வரலாறு கூறுகிறது.

மூலவர் பெயர் மகாதேவர். அஞ்சைக்களத்தீஸ்வரர் என்றும் அழைக்கப்படுகிறார்.

அம்பாளின் திருநாமம் உமையம்மை.

தல விருட்சம் சரக்கொன்றை .இங்கு உள்ள தீர்த்தத்தின் பெயர் சிவகங்கை தீர்த்தம்



**சுந்தரர் தேவாரப்பதிகம்:**

தலைக்குத்தலை மாலை அணிந்த தென்னே சடைமேற்கங்கை வெள்ளம் தரித்த தென்னே அலைக்கும் புலித்தோல்

கொண்டு அசைத்த தென்னே அதன்மேற்கத நாகங்கச்சு ஆர்த்த தென்னே மலைக்கு நிகர் ஒப்பன வன்திரைகள் வலித்தெற்றி முழங்கி வலம்புரி கொண்டு அலைக்கும்கடல் அங்கரை மேல் மகோதை அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.

சிவபெருமானின் பாடல் பெற்ற 274 திருத்தலங்களில் திருவஞ்சிக்குளம் 266 ஆவது திருத்தலம் ஆகும்

இங்கு உள்ள மூலவரின் சிலை 1801 ஆம் ஆண்டு சிதம்பரத்திலிருந்து எடுத்து வந்து இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டதாக இங்கு உள்ள கல்வெட்டுகள் கூறுகின்றது . பஞ்சலோகத்தில் செய்யப்பட்ட நடராஜர் சிலை ஒன்று உள்ளது. இதன் கீழ் "திருவஞ்சைக் களத்து சபாபதி" என்று எழுதப்பட்டுள்ளது

இக்கோயிலில் அம்மன் தனி சன்னதியில் இல்லாமல் சிவனின் கருவறைக்குள் அவருடன் இணைந்து சதாசிவ பாவத்தில் அருள்பாலிக்கிறார்.

பரசுராமர் தாயைக் கொன்ற பாவம் நீங்க வழிபட்ட தலம்.

இங்குள்ள நடராசர், சேரமான் பெருமான் பூசித்து வழிபட்டது.

வீதியின் நடுவில் உள்ள பெரிய மேடை "யானை வந்த மேடை" என்று வழங்கப்படுகிறது. கயிலாயத்திலிருந்து வெள்ளை யானை வந்து இத்தலத்திலிருந்து சுந்தரரைக் கயிலாயத்திற்கு ஏற்றிச் சென்றது வரலாறு. இறைவனின் கட்டளைப்படி சுந்தரரை தேவர்கள் கைலாயம் அழைத்து சென்றனர். அப்போது தன் உயிர்த்தோழன் சேரமானை நினைத்தார் சுந்தரர். உடனே சேரமான் குதிரையில் சுந்தரரை மூன்று முறை வலம் வந்து சுந்தரருக்கு முன்னே கைலாயம் சென்று விட்டார்.

சுந்தரர் வானில் செல்லும் பொழுது இறைவனின் கருணையை நினைத்து பாடிய பதிகம்

*தானெனை முன்படைத்தான் அதறிந்து தன் பொன்னடிக்கே*
*நானெனை பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து*
*வானெனை வந்தெதிர் கொள்ள மத்த யானை அருள்புரிந்து*
*ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை உத்தமனே*

கோயிலின் சுற்றுப்பிரகாரத்தில் 25க்கும் அதிகமான தெய்வங்கள் தனித்தனி சன்னதிகளில் அருள்பாலிக்கிறார்கள். கேரளாவில் உள்ள கோயில்களில் இந்த அளவு சுற்றுப்பிரகாரம் வேறு எந்தக் கோயிலிலும் இல்லை.

## கேரள பாணியில் அமைந்த கோயில்

துவஜஸ்தம்பத்தில் அஷ்ட வித்யேஸ்வரர் களின் உருவங்கள் உள்ளன.

கேரள முறையைப்பின்பற்றி இத்தலத்திலும் வெடி வெடித்துப் பிரார்த்தனை செய்யும் வழக்கம் உள்ளது

கிழக்கு ராஜகோபுர நுழைவாய் பக்கக்கற்சுவரில், யானை உருவங்கள், வெளியிலிருந்து கோயிலுக்குள் செல்வதுபோலவும், எதிர்சுவரில் கோ யிலிலிருந்து வெளியே வருவதுபோலவும் அமைக்கப்பட்டுள்ளன.

கிழக்கு ராஜகோபுர நுழைவாய் பக்கக்கற்சுவரில், யானை உருவங்கள், வெளியிலிருந்து கோயிலுக்குள் செல்வதுபோலவும், எதிர்சுவரில் கோ யிலிலிருந்து வெளியே வருவதுபோலவும் அமைக்கப்பட்டுள்ளன.

இந்தத் திருக்கோயிலில் அருமையான மரவேலைப்பாடுகளில் சிற்பங்கள் உள்ளது

தட்சிணாமூர்த்தி, பசுபதி, நட்டக்கால் சிவன், சந்தியாவேள சிவன், பள்ளியற சிவன், உண்ணி தேவர் மற்றும் கொன்னக்கால் சிவன் ஆகிய சிவபெருமானின் பல்வேறு ரூபங்களின் சித்தரிப்புகளை இந்தக்கோயிலில் காணலாம்.

## திருவிழாக்கள்

இந்த கோயிலில் நடத்தப்படும் ஆனயோட்டம் எனப்படும் யானைப்பந்தயமும் மிகப்பிரசித்தமான நிகழ்ச்சியாக அறியப்படுகிறது. வருடாந்திர கோயில் திருவிழாவின் அங்கமாக இந்த ஆனயோட்டம் நடத்தப்படுகிறது.

மாசி மாதம் மகாசிவராத்திரி 8 நாள் உற்சவமாக கொண்டாடப்படுகிறது. அமாவாசையில் ஆறாட்டு நடக்கிறது.

இத்தகைய சிறப்புகளைக்கொண்ட இந்த திருவஞ்சிக்குளம் மஹாதேவா கோயில் இந்திய தொல்லியல் துறையினரால் பாதுகாக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

## திறக்கும் நேரம்:

காலை 5 மணி முதல் 11 மணி வரை, மாலை 5 மணி முதல் இரவு 8 மணி வரை திறந்திருக்கும்.

## தல வரலாறு:

சேரநாட்டை ஆண்டு வந்த பெருமாக் கோதையார் என்ற மன்னன் சிறந்த சிவபக்தன் திருவஞ்சிக்குளம் உமாமகேஸ்வரர் மேல் தீராக் காதல் உடையவன். அவன் உள்ளத் தூய்மையுடன் சிவனை வணங்கும்போதெல்லாம் தில்லை அம்பலக்கூத்தனின் சிலம்பொலி கலீர் கலீரெனக் கேட்கும். சிலம்பொலி நாதம் கேட்டபின்பே மன்னன் அமுதுண்ணுவது வழக்கம்.

ஒருநாள் சேரமான் இறைவனை வழிபடும் போது சிலம்பொலி கேட்க வில்லை. மன்னன் திகைப்படைந்தான் தன் பக்தியில் குறை நேர்ந்துவிட்டதோ! அதனால்தான் சிலம்பொலி கேட்கவில்லையோ எனக் கருதி, தன் உடைவாளால் தன்னு யிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்தான். அப்போது சிலம்பொலி அதிரசேரமான் முன்பு ஈசன் தோன்றி, வருந்தாதே மன்னா! என் பக்தன் சுந்தரன் தேனினும் இனிய பாடல்களால் தினமும் என்னை அபிஷேகம் செய்வான். இன்று அதில் நான் மெய்மறந்து விட்டேன். எனவேதான் சிலம்பொலி கேட்க சற்று தாமதமாகிவிட்டது என்றார். ஈசனின் இதயத்தையே உருக்கும் பாடல்களைப் புனையும் இத்தகையதோர் சிறப்புமிக்க சிவனடியாரை அறியாது போனோமே என்றெண்ணிய சேரன், தில்லை சென்று அம்பலவாணரைத் தரிசித்தான். பின் திருவாரூர் சபாபதியைத் தரிசித்துவிட்டு சுந்தரரின் இல்லம் தேடிச் சென்றான். அவருடன் நட்பு கொண்டு அளவளாவி மகிழ்ந்தான். சேரன் தனது பூர்வீகமான திருவஞ்சிக்குளத்துக்கு வருமாறு சுந்தரருக்கு அழைப்பு விடுத்தான். அவரது அழைப்பையேற்று வஞ்சிக்குளம் சென்று, சிறிது காலம் அங்கு கோயில் கொண்டுள்ள ஈசனை ஆராதித்து மகிழ்ந்தார் சுந்தரர்.

பின் தன் நாடு திரும்பிய சுந்தரர் தொண்டை மண்டலம் பாண்டிநாடு என பல சிவத் தலங்களையும் தரிசித்து விட்டு மீண்டும் திருவஞ்சிக்குளம் சென்றார். சேரனின் நட்பு அவரை காந்தமென ஈர்த்தது. தன்னைக் காண வந்த சுந்தரரை மன்னன் மேளதாளங்களுடன் வரவேற்று. யானை மீது அமரச் செய்து ஊர்வலமாக அழைத்துச் சென்று, அரியணையில் அமர்த்தி பாத பூஜை செய்து கவுரவித்தான். சுந்தரரும் அங்கேயே தங்கி மலைநாட்டுப் பதிகள் பல கண்டு வழிபட்டார். சுந்தரர் கயிலை செல்ல வேண்டிய நேரம் வந்தது. தலைக்குத் தலை மாலை என்ற பதிகம் பாடிக்கொண்டிருந்த அவரை, வெள்ளை யானையை அனுப்பி அழைத்துவரும்படி சிவகணங்களுக்கு உத்தரவிட்டார் ஈசன். அமரர்கள் சூழ யானையின்மீது கயிலாயம் சென்ற சுந்தரரின் நெஞ்சம் நண்பனையே நினைத்தபடி இருந்தது. தன் உள்ளுணர்வால் இதையறிந்த சேரமான், சுந்தரர் விண்ணிலேறி கயிலை செல்வதைக் கண்டான். உடனே இந்த தலத்தில் இருந்து தன் வெண்புரவியில் ஏறியமர்ந்து, அதன் காதில் நமசிவாய எனும் ஐந்தெழுத்தை ஓத, விண்ணில் சென்ற யானையைத் தொடர்ந்து சென்றது குதிரை. இருவரும் கயிலையை அடைந்தனர்.

# சுவாமிகள் கலந்து கொண்ட நிகழ்வுகள்



2023, அக்.17 மற்றும் 18ந் தேதிகளில் சிருங்கேரி அருள்மிகு சாரதா பீடம் நவராத்திரி நிகழ்வுகளிலும் தர்பார் வழிபாட்டிலும் கலந்து கொண்டார்கள்.



சிருங்கேரி சாரதா பீடம் ஸ்ரீ சன்னிதானம் ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ விதுசேகர பாரதி மஹாசுவாமிகளிடம் பிரசாதம் பெறும் காட்சி.

2023, அக்.18 மற்றும் 19ந் தேதிகளில் பெங்களூர் கைலாஷ் ஆசிரமம், ஞானாட்சி ராஜராஜேஸ்வரி கோவிலில் நவராத்திரியை முன்னிட்டு நடைபெற்ற சண்டி ஹோமத்தில் கலந்து கொண்டு ஆசியுரை வழங்கினார்கள். மற்றும் 19ந் தேதி அன்று நடை பெற்ற மகேசுவர பூஜையிலும் கலந்து கொண்டார்கள்.

கைலாஷ் ஆசிரம பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகள் தொலைநோக்கோடு அற்புதமாகக் கட்டியுள்ள “பிரமிடுக்குள் மருத்துவமனை”யைப் பார்க்கவே அதிசயமாக இருந்தது. அதில் இரும்பு சேர்த்தால் பிரமிடின் பயன் கிடைக்காது என்பதால் வேறு பொருட்களைக் கொண்டு நிர்மாணிக்கப் பட்டுள்ள இந்த மருத்துவமனை மிகவும் புகழ் பெற்றதாகத் திகழும் என்பதில் எந்த ஐயமும் இல்லை.



சுவாமிகள் ஆசியுரை வழங்கும் காட்சி. அருகில் ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகள். ஆசியுரையைக் கேட்க இங்கு சொடுக்கவும்.

https://tinyurl.com/msut483z



ஸ்ரீ ஸ்ரீ திருச்சி மஹாசுவாமிகள் திருமேனியுடன்



பிரமிடுக்குள் உள்ள மருத்துவமனை முன்னால்



பிரமிடுக்குள் உள்ள மருத்துவமனை உச்சியில்ஸ்ரீஸ்ரீதிருச்சிமஹாசுவாமிகள் மற்றும் சீர் வளர் சீர் ஜெயேந்திரபுரி சுவாமிகள் திருமேனிகளுடன்



ஆசியுரை



20.10.2023 அன்று எழுவன்கோட்டை அருள்மிகு ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி சமேத ஸ்ரீ விஸ்வநாதசுவாமி திருக்கோவில் குடமுழுக்கு செய்து 48வது நாள் மண்டலாபிடேக நிகழ்வில் கலந்து கொண்டு, ஆசியுரை வழங்கி, குடமுழுக்கு மலரை வெளியிட்டார்கள். மலரைப் பெற்றுக் கொண்டவர் தேவகோட்டை காவல் துறை துணைக் கண்காணிப்பாளர் திரு.பார்த்திபன். அருகில், குடமுழுக்குக் குழு தலைவர் திரு நடேசன், தேவகோட்டை ஜமீன்தார் குடும்பத்தைச் சேர்ந்த திரு இராமகிருஷ்ணன் உள்ளனர்.





மகான் ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகள் அதிஷ்டானம் அரிமழம் நடைபெற்ற மஹா ஆராதனை நிகழ்வுகள்



ஊனையூர் கும்பாபிடேக யாகசாலையில் மாண்புமிகு அமைச்சர் திரு.ரகுபதி மற்றும் நிர்வாகிகளுடன்.

பழனி சாது சுவாமிகள் 73வது குருபூஜையில் கோவிலூர் சுவாமிகள் கொடி ஏற்றி கலந்து கொண்டார்கள்



பழனி சாது சுவாமிகள் 73வது குருபூஜையில், (இ–வ) செஞ்சேரிமலை ஆதீனம் திருப்பெருந்திரு முத்து சிவராம அடிகள், கௌமார மடாலயம் திருப்பெருந்திரு குமரகுருபர அடிகள், பேரூர் ஆதீனம் திருப்பெருந்திரு மருதாசல அடிகள், கோவிலூர் சுவாமிகள் மற்றும் பழனி சாது சுவாமிகள் மடாலயம் திருப்பெருந்திரு சண்முக அடிகள்.

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்



பஞ்சபூதச் சேர்க்கையினால் விளையும் அன்னம் மற்றும் காய்கறிகளால் அவற்றை நமக்கு அளித்து காக்கும் இறைவனுக்குச் செய்யும் அன்னாபிஷேகம் 28.10.2023 அன்று மாலை நமது கோயிலில் அருள்மிகு ஆதிமூல நாதருக்கும், படிக லிங்கத்திற்கும் நடைபெற்றது. அதன் பின் அன்னப் பிராசாதம் பக்தர்களுக்கு விநியோகம் செய்யப்பெற்றது.





# தீபாவளியன்று சிறப்பு பூஜைகள்



கோவிலூர் தென் சபாநாயகர் ஆலயத்தில் தீபாவளியன்று அருள்மிகு சிவகாமி அம்பாள் உடனுறை தென் சபாநாயகர்.



கோவிலூர் தென் சபாநாயகர் ஆலயத்தில் தீபாவளியன்று ஏலக்காய் கொண்டு அலங்கரித்த அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை பார்த்தசாரதி பெருமாள்.

14.10.2023 அன்று விநாயகர் பூஜையுடன் தொடங்கி 15.10.2023 முதல் ஒன்பது நாட்கள் சக்தி வழிபாடாகிய நவராத்திரி வழிபாடு அருள்மிகு சிவகாமி அம்மனுக்கு சிறப்பாக நடைபெற்றது. தினமும் அபிஷேக, ஆராதனைகளுடன் லலிதா சஹஸ்ரநாம பாராயணமும் நடைபெற்றது.

13.11.2023 திங்கட்கிழமை தொடங்கி அருள்மிகு ஆறுமுகப்பெருமானுக்கு சஷ்டி வழிபாடு நடைபெற்று வருகிற 18.11.2023 அன்று சிறப்பு அபிஷேக ஆராதனைகள், அறுசுவை நைவேத்தியங்களும் நிறைவு செய்யப்பட உள்ளது,

கார்த்திகை மாதத்தில் வரும் எல்லா சோமவாரங்களிலும் மாலை அருள்மிகு ஆதிமூல நாதருக்கு 108 சங்காபிஷேம் நடைபெற இருக்கிறது. உபயதாரர்களாகப் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் தொடர்பு கொள்ளலாம்.

**கார்த்திகை மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்:**

20.11.2023 அஷ்டமி மாலை வைரவர் அபிஷேகம்

25.11.2023 பிரதோஷம்

01.12.2023 சங்கடஹர சதுர்த்தி விநாயகர் வழிபாடு

05.12.2023 அஷ்டமி மாலை வைரவர் அபிஷேகம்

08.12.2023 வளர்பிறை ஏகாதசி மாலை பெருமாள் அபிஷேகம்

10.12.2023 பிரதோஷம்

நமது தென்சபாநாயரகர் கோயிலிலும் பல தினசரி கட்டளைகள், மாதக் கட்டளைகள், சிறப்புக் கட்டளைகள் என்று தற்பொழுது உபயதாரர்கள் சோக்கைப் பணி நடந்து வருகிறது. பக்தர்கள், இவைகளில் உபயதாரர்களாக பங்குகொண்டு பயன்பெற 9443335312 என்ற எண்ணுக்குத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

# காரைக்காலம்மையார் பாடல்கள் முற்றோதல்

கயிலைக்குத் தலையால் நடந்து சென்ற பெருமாட்டி. ஆண்டவனே அம்மை என்று அழைத்த அருள் வெள்ளம். பக்தியால் பாடல்களால் ஆண்டவனின் அடியை அடைந்த பெண் நாயன்மார். இவ்வாறு பல்வேறு பெருமைகளுக்கு உரிய காரைக்காலம்மையாருக்கு உரிய நட்சத்திரமான சுவாதி நட்சத்திரத்தன்று மாதந்தோறும் காரைக்காலம்மையாரின் பாடல்களை முற்றோதுதல் மிகவும் சிறப்பாகும். இதனை கோவிலூர் மடாலயம் 16.10.2023 திங்கட் கிழமை அன்று கோவிலூர் மடத்தில் கோவிலூர் சீர் வளர் சீர் நாராயண தேசிக சுவாமிகள் துவக்கி வைத்தார்.

மழை மேகம் கூடிய இளம் காலைப் பொழுதில் காரைக்காலம்மையார் பற்றிய சிந்தனைகளை பேராசிரியர் சபா. அருணாசலம் அவர்கள் எடுத்துரைத்தார். தமிழ் மூதாட்டி, முனைவர் சரசுவதி இராமநாதன் அவர்களும் காரைக்கால் அம்மையின் சிறப்பை விரித்துரைத்தார்கள்.

தொடர்ந்து நாச்சியப்ப சுவாமிகள் திருமுறைப் பாடசாலை முதல்வர், கலைமாமணி திருத்தணி திரு. சுவாமிநாதன் அவர்களும், திருவானைக்காவல் திரு. தாயுமானவர் அவர்களும் உரிய பண்ணிசையுடன் முற்றோதல் செய்தார்கள். திருநாவுக்கரசு இறைபணி மன்றத்தாரும், மற்றும் பொது மக்களும் இந்நிகழ்வில் கலந்து கொண்டு காரைக்காலம்மையாரின் பாடல்களைப் பாடி அம்மையின் அருளையும் அப்பனின் அருளையும் ஒருசேரப் பெற்றனர்.

இந்நிகழ்ச்சியின் ஒலிப் பதிவினைக் கேட்க இத்தொடுப்புக்குச் செல்லவும்.

https://tinyurl.com/3r9jc5fy

# மாநில அளவிலான சிலம்பாட்ட போட்டியில் பரிசு

கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் மூன்றாம் வகுப்பு பயிலும் S.சாய் ஹரிணி என்ற மாணவி மாநில அளவிலான சிலம்பாட்டப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்றார். அவருக்கு ஆசிரியர்கள் அனைவரும் வாழ்த்துகளைத் தெரிவித்தனர்.



# கோவிலூர் மடாலயம் நடத்தும் நிறுவனங்கள்




## கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் சுமார் 40,000 நூல்கள் உள்ளன. அந்த அட்டவணையை பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்

https://tinyurl.com/2anneukf

அதில் உள்ள எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களை தொலைபேசி எண் 9442912649ல் தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் பட்சத்தில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்து உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப் படும்.நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை.

## கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

தற்போது சுமார் 2750 நூல்களைக் கொண்ட இணைய நூலகத்தில் மிகவும் அரிய நூல்கள் உள்ளன.இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 150 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் நாள் ஒன்றுக்கு சுமார் 700 பக்கங்களை சேர்க்கும் பணி நடந்து கொண்டிருக்கிறது.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களைப் விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

https://tinyurl.com/ynsx3aan

# எதிர் வரும் நிகழ்வுகள்

கோவிலூர் மடாலயம், ஏகன் அனேகன் தவக்குழு மற்றும் ஸ்காட்லாந்து சங்க இலக்கிய மன்றம் இணைந்து நடத்தும் காரைக்கால் அம்மையார் முற்றோதல்.

உலக அமைதிக்காக, உலகத் தமிழர்களை ஒன்றிணைத்து காரைக்கால் அம்மையாரை குருவாக வணங்கி, ஈசனிடம் விண்ணப்பிக்கும் பன்னிரு திருமுறை வழிபாடும் கூட. உலகெங்கிலும் உள்ள தமிழ்ச் சொந்தங்களைச் சென்றடையும் வகையில் இணையத்தில் நேரலையில்.

நாள்: டிசம்பர் 9, கிழமை: சனி, இந்திய நேரம் மாலை 4லிருந்து இரவு 8 வரை. (4 மணி நேரம்)

துவக்க உரை: சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள்; கோவிலூர் மடாலயம்.

ஆன்மீக சான்றோர் பலர் பங்கு கொள்ள இருக்கின்றனர்.

நாடும் வீடும் உலகமும் நலம் பெற வாருங்கள் எல்லோரும்! இணையத்தில் இனிதாய் கண்டு பயன் பெறுக!!

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழை பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.